உ

சிவமயம்.

ஸ்ரீ சங்கரபூஜ்ய பகவத்பாத

ஆசாரியசுவாமிகளவர்கள்

திருவாய்மலர்ந்தருளிய

# ஸ்ரீவேதாந்த சித்தாந்தசார சங்கிரகம்.



இது

பழைய ஏட்டுப் பிரதிப்படி

திருவண்ணாமலை, ஈசானியமடம்

ஸ்ரீ சதானந்தசுவாமிகளால்

சென்னை,

கோமளேசுவரன் பேட்டை,

சச்சிதானந்த அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.



[விலை **1909.** அணா 8]

உ

சிவமயம்.

# பிழை திருத்தம்.



| பக்கம். | பிழை. | திருத்தம். | வரி. |
|---|---|---|---|
| 1 | ரரமன் | ராமன் | 15 |
| 8 | காமந்த | காமாந்த | 18 |
| 15 | கதுவு | கதவு | 11 |
| 19 | சிந்திப்பதெ | சிந்திப்பதே | 6 |
| 21 | எதில் | எதிலெதில் | 28 |
| 26 | போல | போலத் | 16 |
| 27 | விர்த்தி | விருத்தி | 4 |
| 29 | தால். | தால், | 29 |
| 34 | வேறுடன் | வேருடன் | 2 |
| 35 | சீக்கிர | சீக்கிரம் | 19 |
| 36 | களு | களும் | 17 |
| 37 | சம்சரர | சம்சார | 11 |
| 39 | நடிங்கி | நடுங்கி | 21 |
| 39 | கதியாற் | காதியாற் | 24 |
| 40 | பிரபிர | பிர | 12 |
| 42 | யிலலை | யில்லை | 13 |
| 45 | ஈசனையுஞ் | னையுஞ் | 16 |
| 46 | ஆநேக | அநேக | 4 |
| 47 | மாகா | மகா | 15 |
| 49 | கர்தா | கர்த்தா | 29 |

# பிழை திருத்தம்.

| பக்கம். | பிழை. | திருத்தம். | வரி. |
|---|---|---|---|
| 53 | பாபமாய் | பாபமாய | 27 |
| 56 | தெரிந்துக் | தெரிந்து | 13 |
| 64 | ஆத்மாணிவி | ஆத்மாவினி | 12 |
| 68 | யுணடு | யுண்டு | 20 |
| 71 | வேதந்த | வேதாந்த | 1 |
| 90 | யிக்ச | யிச்ச | 27 |
| 91 | யிருக்கிறன | யிருக்கின்றன | 17 |
| 92 | சந்திரனுகத் | சந்திரனுக | 4 |
| 93 | அக்தே | அஃதே | 15 |
| 97 | சமனு | சமானு | 15 |
| 108 | சம்தம | சம்மத | 24 |
| 110 | அடிக்டிக | அடிக்கடி | 14 |
| 111 | சன்மரத்திர | சன்மாத்திர | 18 |
| 112 | வவன் | வாவன் | 23 |
| 122 | ளிவ்ட | ளிவ்விட | 12 |
| 123 | தேற்றம் | தோற்றம் | 24 |
| 126 | யென்று | என்று | 32 |



உ

கணபதி துணை.

சிவமயம்.

# வேதாந்த சித்தாந்தசார சங்கிரகம்.

---

## கடவுள்வணக்கம்.

சிவசிதா னந்தரூப தேசிக மூர்த்தியான
வெவருடை வணக்கத்தாலே யெங்குமா யின்பமான
பவமறு ஞானமுண்டாம் பரமமே லானவந்த
வுவமையில் கோவிந்தாசா னுயர்பதம் வணங்கினேமால். 1

வாக்கொடு மனதிற்கெட்டா வகிலவா தாரமாகிப்
போக்கறு கண்டமின்றாய்ப் பொலியின்பமாகிச்சத்தாய்
பார்க்குநல் லறிவதாகும் பரமவான் மாவையென்று
நீக்கமி லிட்டசித்தி நிமித்தமா சரிக்கின்றேமால். 2

எவ்விறை பற்றதான தெழிற்றவ முடையபோர்க்குத்
தவ்வுமுத் தடைகடம்மை யெளிதினிற் றவிர்க்கலாகுஞ்
செவ்விய கருணைவாழச் சிறந்தநற் றானமான
வவ்விநாய கனதம்போரு கங்களை யருச்சிப்பாமே. 3

அருத்த மாமத னாலுமத் துவிதமாய்ச் சுகமாய்
வருத்து மாதுவி தத்திலக் கணத்தினு மாறுந்
திருத்த வான்ம ராமன்றனைத் தேசிக வடிவா
மொருத்த னாம்பர சிவன்றனை யுளத்தினுள் ளுறுமே.

---

புத்திமான்களான முமுட்சுக்களுக்கு அனுபாசமாகப் பிரஹ்மஞான முண்டாவதி னிமித்தம் வேதாந்த சாஸ்திர சித்தாந்த சாரசங்கிரக மென்னும் இந்தக் கிரந்தம் புகலப்படுகின்றது. சாஸ்திரத்திற்கு யாதொன்று காரணமாக நிச்சயிக்கப்பட் டிருக்கின்றதோ அவ்வனுபந்த சதுட்டயமானது, இந்நூல் சாஸ்திரத்தை அனுசரித் துளதாதலின், இவண் கூறப்படும்.

அதிகாரி, விடயம், சம்பந்தம், பிரயோசனம் எனப் பெயர்வாய்ந்த நான்கு அனுபந்தங்களையும் நூலினாரம்பப் பயனென நுவல்வர்.

(1.) நன்றாக நான்கு சாதனங்களோடு கூடினவனும், யுக்திகளிற் சமர்த்தனும், ஞாபகசக்தி யுள்ளவனும், வித்துவானு மாயபுருடன் இந்நூலில் அதிகாரி என்று நுதலப்படுவன்.

(2.) எந்த வத்துவின்கண் சகல வேதாந்தங்களுக்குஞ் சமன்வயங் காணப்படுகின்றதோ, ஜீவப்பிரஹ்மைக்கிய ரூபமான அந்தச் சுத்தசைதன்யமே விடயமெனவிளம்பப்படும்.

(3.) ஜீவப்பிரஹ்மைக்கிய ரூபமான சைதன்யத்திற்கும் உபநிடதமான பிரமாணத்திற்கும் போத்யபோதக பாவ சம்பந்த முண்டென்று மறிஞோர் மொழிவர்.

(4.) எதனாற் சகலசம்சார பந்தத்தினின்றும் உடனே விடுபடுவானோ அந்த ஜீவப் பிரஹ்மைக்கிய ஞானத்தையே பிரயோசனமெனப் பகர்வர். பலரூபமான பிரயோசனமே பிரவிருத்திக்குக் காரணமாம். மூடனும் பயன்கருதாது ஒருகாரியத்திற் புகுதான்.

டுத்தி சாலியான எப்புருடனுக்குச் சாதனங்கள் பூரணமா யிருக்கின்றனவோ அப்புருடனுக்குத் தான் இந்த ஆன்மஞானம் சித்திக்கும். அதிற் சிறிது குறை யினும் இது சித்தியாது. எச்சாதனங்க ளிருப்பின் முத்தி சித்திக்குமோ, எவை யில்லாவிடிற் சித்தி யாதோ, அச்சாதனங்கள் நான்கெனப் பரம இருடிகள் கூறுவதே பிரமாணம். நித்தியா நித்திய வத்துவிவே கம், இகா முத்திரார்த்த பலபோக விராகம், சமாதி சட்க சம்பத்தி, முமுட்சுத்துவம் என நான்கிற்கும் முறையே பெயராம்.

(i.) பிரஹ்மம் ஒன்றே நித்யம்; மற்றையவை யநித் தியமென்னு முணர்வே நித்தியா நித்திய வத்து விவேக மென்று முற்று முணர்ந்தோர் மொழிவர். மண்முத லிய காரணம் முக்காலங்களினு மிருத்தலால் நித்திய மென்று சொல்லப்படும்; காரியங்களான கடமுதலி யவை நசித்துப்போவதால் அநித்தியமென்று சொல் லப்படும். அவ்வாறே இச் சகலசகத்தும் பிரஹ்மத்தி னின்றும் உண்டாவதால் அநித்தியம்; காரணமான பிரஹ்மம் மண்முதலியபோல் நித்தியம். இச் சகத்திற் குப் பிரஹ்மத்தினது சன்னிதானத்தினின்றும் சிருட் டியை "அந்த இந்தப் பிரஹ்மத்தினின்றும் ஆகாய முண்டாயிற்று" என்று வேதங் கூறுவதினாலே இந்தச் சகத்து நித்தியமன்றென்பதிற் சம்சயமில்லை. அவய வத்துடன் கூடின காரியமெல்லாம் அநித்திய மென் பது யாண்டும் பிரசித்தமா யிருப்பதால், வைகுண்டாதி உலகங்கள் நித்தியமென்று மூடர்சொல்வது புத்திமயக் கத்தாற்றான். இவ்வாறு சுருதி யுக்திகளால் விவேகித் துப் பார்ப்பதே நித்தியா நித்திய வத்துவிவேகமாம்.

(ii.) இகபரங்களிலுள்ள விடயங்கள் அநித்தியங்களென்று துணிவுளதாகவே மித்தியாபுத்தியால் அவைகளில் ஆசையில்லாம லிருப்பதே வைராக்கிய மென்று சொல்லப்படும். நித்தியா நித்திய வத்துவிவேகத்தாற்றான் உடனே புருடனுக்கு இகபரங்களிலுள்ள மாதர் முதலாகிய அநித்திய வத்துக்களில் வைராக்கிய முண்டாம். போக்கிய பதார்த்தங்களில் காக எச்சத்திற் போன்று சகிக்கொணுத் தன்மை யுண்டாகுமேல தீவிர வைராக்கிய மென்றும், விடயங்களிற் றோடதிருட்டியே யதற்குக் காரணமென்றுஞ் சொல்லுவர். எப்போக்கியவத்துவில் தோடத்தை எவன் பார்க்கிறானோ அவனுக்கு அதில் மறுபடி பிரவிருத்தி யுண்டாகமாட்டாது. அஃதெவ்வாறெனில்? உருவமுள்ளவளா யிருந்தாலும் எந்த வேசியை யுள்ளே மகாவியாதியுள்ளவளென்று எவனறிவானோ அவன் அவளை அடைய விரும்பா னல்லவா! விடயங்களுடைய மெய்ம்மையை நன்றாக விசாரிப்பதால் உண்மையாய் அவற்றின் றோடம் வெளியா மாதலால், இகபரங்களிலுள்ள பதார்த்த சோதனையே செய்யத்தக்கது.

கருப்பத்திற் றன் றாய்வயிற்றில் மலமூத்திரமத்தியிற் றானிருந்ததையும் அக்காலத்தி லந்தமலத்தி லிருக்கிற புழுக்கள் தன்சரீரத்தைக் கடித்ததையும், தாயினுதராக்கினி தன்னைத் தகித்ததையும் யோசித்துப் பார்த்தால் எவன்றான் இந்தச் சனனரூபசம்சாரத்தில் விரத்தியை யடையான்! சிசுவாயிருக்குங் காலத்தில் மலமூத்திரங்களிற் பிறழ்ந்து கொண் டிருந்ததையும், பிறழச் சக்தியில்லாமல் உயரப் பார்த்துத் துன்பத்தோடும் சயனித் திருந்ததையும், பாலக்கிரகாதிகளால்

துயரடைந்ததையும் ஆலோசித்துப்பார்த்தால் யாவன் றான் வயிராக்கியத்தை யடையான்!

குமாரப் பருவத்திற் றன்னவராலும் மன்னியராலுந் தாடனமுறல், அறியாமை, சபலத்தன்மை, புன்றொழிலில் மருவல், வேண்டாமென விதித்த அன்னதில் முயல்வு முதலியதா லுறுந்துயரை ஆலோசிக்கில் யாவன்றான் விரத்தியை மருவான்!

யௌவனவவத்தையில் மதத்தினாற் கருவத்தை யடைந்து பெரியோரை அவமானிப்பதையும், காமாதுரனாய்ச் சாஸ்திரமரியாதைகளைத் தாண்டி நடப்பதையும், மாதர்களா லேவப்பட்ட அவ்வத் துர்நடத்தைகளை விதிபோன்று செய்து துன்பப்படுவதையும் ஆராயில் யாவன்றான் விரத்தியை யடையமாட்டான்?

வயோதிகத்தில் உடலினதுருவம் விகாரமடைந்து யாவராலும் அவமானத்தை அடைவதையும், யாவரிடத்திலுந் தீனபாவத்தோடு உரையாடலையும், தனது புத்தி குறைவதையும், அக்கால் தான் யாவருக்கும் இலக்கியப் படாமல் ஒருவராலும் ஆதரிக்கப்படாமற் றுர்த்தசை யடைவதையும் ஆலோசித்துப் பார்த்தால் யாவன்றான் விரத்தியை யடையான்!

இன்னுமவ்வவத்தையிற் பித்தம், சுரம், திணவு, க்ஷயம், இருமல், சூலை, கோழை யுமிழ்தல் முதலான வியாதிகளா லுண்டாகப்பட்ட அதி துக்கத்தையும், தேகத்தி லுண்டாகிற துர்க்கந்தத்தையும், சுகமாயிருக்கவிடாமல் சம்பவிக்கப்பட்ட வேதனையையும், சித்தத்தின்கண் அநேகவிடயங்களைப்பற்றி யெழுஞ் சிந்தைகளையும் ஆலோசித்துப் பார்த்தால் யாவன்றான் விரத்தியை மேவான் !

மரணாவத்தையில் நமன் இவன் கண்கட்குப்புலப் படுகின்றமையின் உண்டாம் பயத்தால் நடுக்கமுண்டா வதால் மருமங்களில் வேதனையுறலையும், பெருமூச் சிழுத்தலாலுறும் வேதனையையும், பிராணன் வெளிப் படுங்காலத்தி லுளதாம் வேதனையையும் ஆலோசித்து நோக்கில் எவனுக்குத்தான் வைராக்கியம் உண்டாக மாட்டாது!

உயிர்நீங்கியபின் எமதூதரால் அங்கார நதியில் மூழ்குவிப்பதையும், தபித்துக்கொண் டிருக்கும் கும்பீ பாகமென்னும் மகாநரகத்திற்றுன்பப்படுத்துவதையும், நெருங்கிய அசிபத்திர கானனத்திற்புகும்படி வருத்து வதையும் ஆலோசித்துப் பார்த்தால் யாவன்றான் விரத்தியை யடையான்!

மரணானந்தரஞ் சிலபேர் புண்ணியத்தால் சிறிது காலஞ் சுவர்க்கத்தையடைந்து புண்ணியம் க்ஷயமான வுடன் ஆங்குள்ளாராற் றலைகீழாய்த் தள்ளப்பட்டுத் துறக்கத்தினின்றும் நட்சத்திர வுருவமாய்க் கீழே விழும்பொழுது உடல்பொடிப் பொடியாய்ப் பூமியில் விழுவதை ஓர்ந்து பார்க்கில் யாவன்றான் விரத்தியை மேவான்!

வாயு அருக்கன் வன்னி இந்திரனாதிய திக்குப் பாலகர் பதவிகளை யடைந்தவரும் ஈசன் உக்கிரபயத் தால் மனநடுங்கலையும் பகைவராகிய அசுரர்பயத்தா லடிக்கடி துன்புறுதலையும் ஆலோசித்துப் பார்க்கில் யாவன்றான் விரத்தியை யடையான்!

பிரமன் முதல் மகாமகேஹஸ்வர பரியந்தம் உள வான ஆனந்தம் ஔபாதிகமென்று சுருதி கூறுகின்ற

தை உணர்ந்தயாவன் உண்மையல்லாத அதை விசாரித்துப் பார்த்துப் பரமவைராக்கியத்தை யடையான்!

சாலோக்கியாதி முத்திகளை யடைந்தாலும் அம்முத்திகள் சத்கர்மவிசேடத்தால் உதித்திருத்தலின் யாது கருமத்தாலுளதாமோ அது நித்தியமாகமாட்டாதாதலின் அம்முத்திகள் நித்தியமன்றென்பதை ஆலோசித்த யாவன் விரத்தியை யடையான்!

எவ்வுலகின்கட் செல்லினும் ஆங்காங்கு ஏற்றத் தாழ்வோடு கூடிய கதி தாரதம்மியமும் அவற்றாலுண்டாந் துயரும் உளவென்பதை யுணர்ந்த யாவன்றான் விரத்தியை மேவான்!

உலகின்கண் எந்த விவேகமுள்ள புருடன் இறந்துபோம்பிராணிகளைக் கண்டுகொண்டிருந்தும் வாளா மோகத்தினாலே அநித்தியமாயுஞ் சுகதுக்கங்களோடு கூடியதாயுமிருக்கிற இல்லமாதிகளில் ஆசக்தியையடைவன்!

விவேகத்தால் விசாரிக்குங்கால் கிரகத்திலாவது, மங்கையரிடத்திலாவது, மற்றைய பதார்த்தங்களிடத்திலாவது யாது சுகமிருக்கின்றது?

மாயாரூப தமசினாலே குருடாக்கப்பட்ட விவேகமில்லாதவர் யாவரோ அவர்தா மிந்தக் கிரகமாதிகளில் மோகிக்கிறார். சமஸ்தவிடயமும் அத்திப்பழம்போன்று ஆராயாதபரியந்தம் இரமணீயமாய் அறியாதார்க்குப் புசிக்க யோக்கியமா யிருக்கும். விவேகிகளுக்கு மாதர் முதலிய விடயங்களில் ஆசக்தியுண்டாகமாட்டாது. நண்டானது தடாகத்தில் நீர்வற்றியும் வசித்தவளையை விட்டு நீங்கச் சக்தியற்றதாய் எவ்வாறு மோகத்தால்

அவ்விடத்திற்ருனே இறக்கின்றதோ அவ்வாறே கிரகஸ்தனும் சாரமற்ற சம்சாரத்தைவிடச் சக்தியற்றவனாய்ப் புத்திரமித்திரகளத்ராதி பாசங்களாலே கட்டுப்பட்டவனாய் அவ்விடத்திற்ருனே மரிக்கிருன்.

நன்காராயில் காராக்கிரகத்திற்கு கிரகத்திற்கும் சிறிதும் பேதமில்லை.

இல்லத்தின் அவாவே கால்விலங்காம்; மனைவி மக்கள் மேலுள்ள ஆசையே திடமான கழுத்திலிட்ட கயறு; பிராணனைவாங்கக் காரணமாயுஞ் சிரசில் விழப்பட்ட சாட்சாத் பேரிடியாயும் உள்ளது மிருக்க தனுசைதான். ஆசாவான்களுக்குள் அநேக ஆசாரூப பாசங்களாலே கட்டப்பட்ட கால்களையுடையவனும், அதனுல் எழுந்திடக்கூடச் சக்தியற்றவனும், காமக்குரோதாதி காவற்காரரால் காக்கப்பட்டவனும், மூவேடணைகளாற் சுதந்திர மற்றவனுமான யாவன்ருன் மோகமாகும் திடமான மதில்களாற் சூழப்பட்ட சம்சார காராக்கிரகத்தினின்றும் வெளியேறச் சமர்த்தனுவன்? காமந்தகாரத்தால் மூடப்பட்ட திருஷ்டியுடையவன் அசத்தாகிய அரிவையர் உருவத்திலும் மோகத்தையடைவன். உலகின்கண் குருடனுக்கு நல்லதிற்சுகமும் கெட்டதிற் றுக்கமும் என்று விவேகந்தோன்றுகின்றதில்லையன்றே.!

கோழையை உமிழ்ந்துகொண்டிருக்கின்ற வாயையும், சளிபெருகிக்கொண்டிருக்கின்ற நாசியையும், பீளையுங் கண்ணீரும் பெருகிக்கொண்டிருக்கின்ற கண்களையும், வேர்வை பெருகிக்கொண்டும் நகசிகைபரியந்தம் துர்க்கந்தம் வீசிக்கொண்டிருக்கின்ற தேகத்தையும், இன்னும் மனத்தானினைக்கவும் வாக்கால் வசனிக்கவும்

யோக்கியமல்லாத அவயவத்தையும் உடையமங்கையின் உருவமானது நற்புத்திமான்களால் நோக்குதற்கு எவ்வாறு பாத்திரமாகும்? விட்டிலானது தூரத்தில் தீபத்தை நோக்கிப் போக்கிய யோக்கியமான வஸ்துவிது வென்று சிந்தித்துவந்து அத்தீபச் சுடரில் எவ்வாறு விழுந்து மடிந்து விடுகின்றதோ அவ்வாறே விவேக திருஷ்டியற்ற மூடனானவன் அக்கினிச் சுடர்போன்ற உருவத்தோடு கூடிய மாதர்கள்பேரில் மோகித்தணைந்து பின் பரிதாபத்தையுறுவன்; அவ்வாறுபவன் அதிசூக்ஷ்மமான மோக்ஷமார்க்கத்தை எவ்வாறறிவன்?

முத்தியை அடைய வேண்டுமென்னு மிச்சையுள்ள விவேகிகளுக்குக் காமனே சாக்ஷாத்தெமன்; காந்தையே வைதரணியென்னும் அக்கினி நதி; இல்லமே வைவஸ்வதபுரம் என்னும் எமாலயம்; நமனுலகத்திலேயும் இல்லத்திலேயும் மனுடர்களுக்கு முத்தாபங்களா லுண்டான துன்ப நிவர்த்தியானது இல்லை. எப்பொழுதேனும் அத்தாபத்தா லுண்டாகுந் துன்பமானது சிறிதுபோது இல்லாததைநோக்கி அவ்வில்லத்தைச் சுகரூபமாக மூட ஜனங்கள் கருதுகின்றார்கள். உலகின்கண் ஆராயில் நமனுக்குங் காமனுக்குந் தாரதம்மியம் மிக வுளது; நமன் பிரீதியற்றவனாய் இதத்தையே புரிகின்றான்; காமன் பிரீதியுற்றவனாய் அகிதத்தையே புரிகின்றான். நமன் துஷ்டர்களுக்கே துன்பத்தை யீகின்றான்; சத்புருடர்களுக்கோ பிரீதியுள்ளவனாய் இன்பத்தையே யீகின்றான்; காமனோ சத்புருடர்களுக்கே நற்கதியடையாவண்ணம் இடையூறு செய்துகொண்டு அனர்த்தத்தையே செய்கின்றான்; துஷ்டர்களுக்கு அனர்த்தஞ் செய்வன் என்பதில் கேட்பது என்னே?

பிரமதேவரானவர் பிரபஞ்ச விருத்தியைக்குறித்துக் காமனைச் சிருட்டித்தார்; அக்காமனாலே யிவ்வுலகமானது மோகத்தையுற்றதாய்ச் சந்திரனாலே சமுத்திரம்போன்று விருத்தியை யடைகிறது. காமனென்னும் மகாப் பிரஹ்மஞான காதகனானவன் உலகை மோகிப்பதற்காக மனதின்கண் வசித்துக்கொண்டு ஸ்திரீபுருஷாளை ஒருவர்க்கொருவரது அவயவரூபத்தாலும் புன்சிரிப்புகளாலும் மனோவபிப்பிராயங்களாலும் ஒருவர்க்கொருவர் மோகப்படும்படி செய்வித்துத் தமது மோக வுருவமான பரஸ்பரப் பிரேமாலாபத்தாற் பந்தித்து சகத்தினது சிருட்டியை விருத்தி பண்ணிக்கொண்டு பிரமிக்கச் செய்கின்றான். ஆதலாற் சமஸ்த சனங்களின் உள்ளத்தின் கண்ணுள்ள காமனது வேகத்தால் இயல்பாயே போக்கிய வஸ்துக்களில் பிரவிருத்தி உண்டாகிறது; இது நிச்சயம். அங்ஙனமன்றேல் ஒருவராலுந் தெரிவிக்கப்படாத விடயங்களில் உலகினருக் கெவ்வாறு பிரவிருத்தியுண்டாகும்? ஆகையினாலேயே சகல ஜனங்களுக்கும் இச்சை மிகவுந் திடமாயிருக்கிறது. இத்தேகஞ் ஜீரணமாயினும் ஆசை ஜீரணிக்கிறதில்லை. புத்திமானான எப்புருடன் விடயத்திற் றோடத்தைக்கண்டு காமபாசத்தாற் பந்தப்படாம லிருக்கின்றானோ அவன்றான் மோக்ஷமார்க்கத்தை யடைபவன்.

சத் புருடர்களுக்குக் காமனைச் சயிக்கச் சூட்சுமமான உபாயஞ் சாற்றுவாம். அஃதாவது:—சங்கற்பப் பரித்தியாகமே சுலபமான உபாயமென்று சொல்லப்படும்: காண்பதாயுங் கேட்பதாயுமுள்ள எப்போக்கிய பதார்த்தத்திலும் நல்லதென்னும் புத்தியை விடுவதினாலே எவ்வாற்றானுங் காமனணுகான். ஆசைக்குக் கார

ளைஞ் சங்கற்பம்; சங்கற்பத்தாற்றான் காமமுண்டாகின்றது; பீஜங்கருகி லங்குர மெவ்வாறு முளையாதோ அவ்வாறு சங்கற்பம் நஷ்டமானால் காமமுண்டாக மாட்டாது. காமத்தைச் சயிக்க விரும்பிய புருடன் போக்கியவத்துவிற் சுகமென்னும் புத்தியை விடவேண்டும்; எதுவரையினும் விடயத்திற் சுகப்பிராந்தி யிருக்கின்றதோ அதுவரையினும் காமத்தைச் சயிக்கச் சமர்த்தனாகான்.

சங்கற்பம் எழாதிருத்தற்குக் காரணம் யாதெனின்? வஸ்துவின் எதார்த்தத்தைச் சிந்திப்பதும், அதிலனர்த்த முண்டாவதைச் சிந்திப்பதுமாகிய யிவ்விரண்டாற் சங்கற்பமெழா தொழியும். அஃதெவ்வாறெனில்? இரத்தினத்திற் கல்லென்னும் எதார்த்த புத்தியும் அதைக் கிரகித்துவைத்திருப்பதினாற் பயமுண்டாமென்னும் புத்தியு முளதாமாயின் அது நன்றாயிருக்கின்றதென்னும் நினைவும் அதைக் கிரகிக்கவேண்டுமென்னும் நினைவும் உண்டாகாது. எவ்வத்துவின் கண்ணும் அதினுண்மையான தத்துவத்தைப் பார்ப்பதும் அதனாலனர்த்த முண்டாமென்னுஞ் சிந்தனையும் ஆகிய இரண்டும் சங்கற்பத்தையுங் காமத்தையுங் கெடுக்கு முபாயமாம்.

தனமானது பயத்துடன் கூடினதாயும், எப்பொழுதுந் துக்கத்தையே விருத்திசெய்கின்றதாயும், பெருங்கூக்குரலை யுண்டு பண்ணுகிறதாயும், பந்துக்களுடைய பொறாமையை ஜனிப்பிக்கிறதாயும், நல்ல சமதமாதி சற்குணங்களைப் பாதிக்கிறதாயும், லோபி ஜனங்களாற் கொண்டாடத் தகுந்ததாயும், முத்திநெறிக்குச் சாதனமில்லாததாயும், மனோமலத்தை, நிவிர்த்திக்கத் தகாத

தாயுமாகிய யிவ்வெட்டுவிதக் குற்றங்களுடன் கூடி யுள.

மேலும், இத்தனமானது வாஸ்தவமாய்விசாரிக்குங் கால் பயத்தோடு கூடியதாயும், அனர்த்தத்திற்குக் காரணமாயுமிருப்பதினாலேயே சற்புருடர்களுக்குச் சுகத்தை யுண்டுபண்ணு கிறதாயில்லை. தனிகனுக்கு அரசராலும், சோரராலும், பங்காளிகளாலும், பந்துக்களாலும், விஸ்மிருதியோடு கூடிய தம்புந்தியாலும் பயமுண்டாகின்றதன்றோ! சம்பாதிக்கின்றபோதும் இரக்ஷிக்கின்ற போதும் தானங்கொடுக்கின்றபோதும் வாஸ்தவமாய்த் தனமானது மனிதர்களுக்குத் துன்பத்தையே உண்டு பண்ணுகின்றதே தவிர சுகத்தை யுண்டுபண்ணுகின்ற தேயில்லை. சற்புருடர்களுக்குங்கூடத் தனமானதுபிராப்தமாகில் லோபம் விர்த்தியடைகின்றது; அந்தலோபத்தால் விவேகம் அழிந்து விடுகின்றது; விவேகங் கெடிற் சுயந்தானுங் கெட்டுப்போகின்றான்.

தனமானது பிராப்தமாகாத காலத்திற் றரித்திரியத்தாற் பரிதபிக்கின்றான்; லபிக்கிலோ லோபத்தாற் பரிதாபப்படுகின்றான். இவ்வாறு லாபாலாபங்களிரண்டினும் பரிதாபப்படுத்தும் தனமானது எவனுக்குத்தான் சுகத்தை யுண்டுபண்ணும்!

போகத்தி னிமித்தம் உபயோகப் படுத்துவதால் மதத்தை யுண்டுபண்ணுகின்றது; தானங்கொடுப்பதால் பின்னர்ச் சுகத்தை யடைவதற்காகச் சன்மத்தை யுண்டுபண்ணுகின்றது; ஆதலால் இரண்டுவிதத்தினுந் தனம் உபயோகமில்லை. போக தானங்களைவிடத் தனத்திற்கு வேறொரு பயனுமில்லை. தனத்தினாலே மதம் விருத்தியாம்; மதத்தால் நன்னினைவு கெடும்; நன்

னினைவு நசிக்கிற் புந்தி கெட்டுப்போம்; புந்திகெடில் தா னுங் கெட்டுப்போவான். புத்தியற்ற மூடனானவன் தன துள் வசிக்கும் ஆசாபிசாசத்தாற் றிடமா யாலிங்கனம் பண்ணப்பட்டவனாய்த் தனந்தான் சுகத்தைக் கொடுக் கின்றதென் றெண்ணி அதை யெப்பொழுதும் பார்த் துக்கொண்டு அதன் அருகில் வசித்துக் கொண்டிருக் கின்றான். பின்பந்தத்தனம் செல்லுங்கா லிந்த மூட னுடைய பிராணனையும் அபகரித்துச் செல்லுகின்றது. தனவான் அந்தகனைப்போன்று அன்னியனைக் கண்ணாற் கூடப் பாராமல் மூடர்களாலேவப்பட்டவனாய்ச் சற்புரு டர்களாற் றள்ளப்பட்ட மார்க்கத்திற் சஞ்சரித்து அடிக்கடி அவமானத்தையடைந்து மோகாந்தகாரமா கிய கிணற்றில் விழுகின்றான். அவ்வாறாய தனிகாந்தக னுக்குக் கண்டுலக்கும் அவுடதமான அஞ்சனம் தாரித் திரியந்தான். தனஞ் சேர்ந்தபொழுது லோபம் குரோ தம் டம்பம் மதம் மாச்சரியமுதலான துர்க்குணங்க ளும் விர்த்திபடைகின்றன. அவ்வாறாக, அந்தத்தனமா னது சித்தசோதன சாதனமாக எவ்வாறாகும்? தனமா னது வருங்கால் அறிவோர்க்கும் ஒருபங்கு துன்பம், சிலவிடும்போது இரண்டுபங்கு துன்பம், வீண்சிலவு நேரிடும்போது மூன்றுபங்கு துன்புண்டாகின்றது. இல் லத்துட் புகுந்துள்ள பாம்புபோலும் எப்பொழுதும் கெடுதலையும் பயத்தையும் சிந்தையையும் கொடுக்குந் தனத்தினாலே பிராணிகளுக்குச் சுவஸ்தசித்தம் எவ்வா றுண்டாம்? தனமற்றபுருடன் பெரிய ஆரண்யத்திலும் நிர்ஜன வனத்திலும் நகரிலும் இடமற்ற தரையிலும் சோரர்களுடனும் மற்றிதராளோடுங் கூடியிருப்பினும் கூடாதொழிந் திருப்பினும் சகலராலும் ஏழையென் றாதரிக்கப் பட்டவனாய்ச் சுவஸ்த சித்தனாய்ச் சுகமாய்

வசிக்கிறான். தனமுற்றபுருடன் சதா சஞ்சலசித்தனு யும் தனது புத்திரனிடத்திலும் பிரியுள்ளவனாயும் துன்பத்தையே யடைகின்றான். ஆதலினால் தனமானது அனர்த்தத்துக்கெல்லாங் காரணமாயிருக்கிறது. இந்த தனத்தினாலே முத்தி சித்திக்காது. ஆதலாற்றான் சற் புருடர்கள் ஞானத்திற்குப் பிரதிகூலமாயிருக்கிறசர்வத் தையும்விட்டு வனப்பிரதேசத்தில் வசிக்கிறார்கள். விவே கிகள் சிரத்தாபக்தியுடன்கூடின குணவதியான பதிவிர தா ஸ்திரீயையும், பிரசித்தர்களும் சபைக்குயோக்கியர் களுமான புத்திரர்களையும், தளர்வற்ற தனதானியாதி செல்வங்களா னிறைந்த இல்லத்தையும், சுருதியுத்தி களால் அநித்தியமென்று அறிந்து சந்யசித்துக்கொள் ளுகிறார்கள். விவேகமில்லாதவர் முற்கூறியவைகளை யெல்லாம் சுகமென்றெண்ணித் துன்பசாகரத்தில் அலை ந்து கொண் டிருக்கிறார்கள். எச்செந்துக்கள் மலக்கூட் டத்திற் கிருமிகள்போல மனைவி மைந்தர் வீடு நிலமுத லியவற்றின் ஆசையினால் இல்லத்தைச் சுவர்க்கம்போ லச்சுகமென்று இரமிக்கின்றார்களோ அம்மூர்க்கர்களுக் கு முத்தியென்னும் வார்த்தையே யில்லை; சகலநரகத் திற்குஞ் சமானமான கர்ப்பவாசமாகின்ற துக்கப்பிரவா கந்தானுளது. எப்புருடர்களுக்குத் தாரபுத்திராதி களில் ஆசை யொழிந்துளவோ அப்புருடர்களுக்கே முத்திசித்திக்கும்; அன்னியர்களுக்குச்சித்தியாது. சற் கருமங்களால் பாபக்ஷயத்தைப் பண்ணினவர்களாயும் வேதத்தின் றாற்பரியங்களை யறிந்தவர்களாயும் சுத்த சித்தத்தை யுடையவர்களாயும் புத்திமான்களாயும் நித் தியா நித்தியவஸ்துக்களின் விவேகத்தையுக்தியால் அடி- க்கடிசெய்கிறவர்களாயும் அதனாலுளதாகிய மகாவிரக்தி யாகிற வாளாயுதத்தை யுடையவர்களாயும் விடயாசை

களை விடுத்து முத்தியின்மாத்திரம் ஆசையுள்ளவர்களாயு மிருக்கிற பாக்கியவான்களுக்கே மாதர் முதலாகிய விடயவாசையாகிய கொடியை அறுப்பது சுலபமாகும். சமுசாரமென்னும் பலவானான மிருத்யுவானவன் பிரவேசிக்கத் தனம் மனைவி சிங்குவை என்னும் மூன்று வாசல்கள் இச்சகத்தில் பிரசித்தமாயுள. எவன் அம்மூன்று கபாடங்களையும் அடைத்திருக்கிறானோ அவனுக்குச் சமுசார மிருத்யு பயமில்லை. முத்தியென்னும் லக்ஷ்மி புரத்திற்குரிய முதல்வாசல் யாவராலுஞ் சயிக்கக்கூடாதது; அது தனம் மனையெனப்பெயரிய இரண்டு கதவுகளால் திடமாக மூடப்பட்டிருக்கிறது; அதற்கு ஆசையென்னும் தாளும் இட்டிருக்கிறது. எத்தீரன் அம்மூன்றையும் பிளந்துவிடுகிறானோ அத்தீரனே அதிற்புகுந்து சுகிக்க யோக்கியனாகின்றான். விவேகமென்னும் அஸ்வாரூடனாய்ப் பொறுமையென்னும் கவசந்தரித்தவனாயுள்ள புருடனுக்குச் சத்துரு பயமில்லை. பரம புருடர்கள் விவேகத்தா லுண்டாகின்ற தீவிரவைராக்கியத்தையே முத்திக்கு முக்கியகாரணமாகச் சொல்கிறார்கள்; ஆதலால் விவேகமுள்ள முமுட்சுவானபுருடன் முதலில் எம்முயற்சி செய்தாவது விரத்தியைச் சம்பாதிக்கவேண்டும். வைராக்கியமற்றபுருடன்தேகாபிமானத்தை விடச் சத்தனாகான்; தேகாபிமானத்தை யொழிக்க வைராக்கியந்தான் மகத்தான உபாயம். வித்துவான்களா யிருந்தபோதிலும் வைராக்கிய மில்லாதவர்கள் நமனாலயம்போலிருக்குந் தங்கள் வீட்டில் முத்தாபங்களாற் றபிப்பிக்கப் பட்டவர்களாய்த் துன்பத்தையே யடைகிறார்கள்.

(iii) சமம் தமம் திதிக்ஷை உபரதி சிரத்தை சமாதானமென்னு மிவ்வாறும் சமாதிசட்கமெனப்படும்.

(1) மனந் தன திலக்கியத்தில் ஒரே விருத்தியால் நிச்சலமாய்த் திதிபெற்றிருப்பதே சமமென்று சமத்தி னிலக்கண மறிந்த சற்புருடர்களாற் சாற்றப்படும். உத்தமமென்றும் மத்திமமென்றும் அதமமென்றும் அச்சமம் மூன்றுவிதமாம்.

(க) மனமானது தன் விகாரத்தை விடுத்துக் கேவலம் வஸ்துமாத்திரமா யிருப்பதுவே முத்தி லக்ஷணமான உத்தமசாந்தி யென்று கூறப்படும்.

(உ) சுத்த சத்துவமா யிருக்கின்ற பிரஹ்மாகார விருத்திப் பிரவாகமே மனதின் மத்திமசாந்தி யென்று சொல்லப்படும்.

(ங) விஷய வியாபாரத்தை விட்டுச் சிரவணத்தில் மனது நிலைபெற்றிருத்தலே மிசிரசத்துவமான அதமசாந்தி யென்று சொல்லப்படும். இச்சமமானது பூர்வாங்க முத்தராங்க முளதேற் சித்திக்கும்; இலதேற் சித்தியாது. அவற்றுள்:—

இகாமுத்திரார்த்த பலபோகவிராகமே பூர்வாங்கமாம்; தமாதிகளே உத்தராங்கமாம். காமாதியாய பகைவர்களை யாவன் வெற்றி கொள்ளவில்லையோ அவனுக்குச் சாந்தி சித்தியாது. எவனால் ஈஸ்வரன் ஆராதிக்கப்படவில்லையோ எவனுக்குக் குருபரனது திருவருள் கிட்டவில்லையோ எவனுக்கு மனது வசமாகவில்லையோ அவனுக்குச் சாந்தி சித்தியாது. யாதொரு சாதனமுண்டாயின் மனப்பிரசாதமுண்டாமோ யாதொரு சாதனமில்லாவிடின் மனதின் பிரசாதமானது உண்டாகாதோ அவ்வாறுப மனப்பிரசாதத்தின் சாதனத்தை மனம் பிரசன்னமாகு நிமித்தம் புத்திமான்களாற் கேட்கத்

தரும். பிரஹ்மசர்யம், அஹிம்சை, பிராணிகளிடத்திற் றயை, அவக்கிரதை, வைராக்கியம், சவுசம், இடம்ப மில்லாமை, சத்தியம், நிர்மமதை, ஸ்தைரியம், நிரபி மானம், ஈசுரத் தியானத்திற் றற்பரமா யிருப்பது, பிரஹ்ம வித்துக்களுடன் சகவாசஞ் செய்தல், ஞான சாஸ்திரங்களில் மிகுந்த ஆசை, சுகதுக்க சமத்துவம், மானத்தில் அனுசக்தி, ஏகாந்தவாசம், முமுட்சுத்துவ மென்னு மிப்பதினெட்டுத் தருமங்களும் எவனுக்கு உளவோ அவனுக்கே மனம் பிரசன்னமாம். இத் தரு மங்க ளில்லாதவனுக்கு வேறனேகங்கோடிப்பிரகாரங்க ளாலும் சித்தம் பிரசன்னமாகாது. அவற்றுள்:—

1 பிரஹ்மசர்ய மாவது மாதர்தமை நினைத்தல், தரிசித்தல், அவர் குணநடையை மகிழ்ந்து புகழ்ந்தி டல், நன்கதெனுநினைவு, அவர் பாற்காதல், ஒருவர்க் கொருவ ருரையாடல், பிரியாக் கடுஞ்சகவாசம், சேர்க் கை என்னுமிவற்றினை எண்வகை மைதுனமென் றோ துவர். இவற்றினை விட்டிருப்பதுதான் சித்தப்பிரசா தத்தைத்தரும் பிரஹ்மசர்யமாம்.

2. அஹிம்சையாவது வாக்கால் மனத்தாற் காயத் தால் வாதையை எவ்வுயிர்க்கும் வழங்காம லிருப்பது அஹிம்சை யென்று சொல்லப்படும்.

3. தயையாவது தனதிடத்திற்போலச் சகலப் பிராணிக ளிடத்திலும் திரிகரணங்க ளாலும் எப் பொழுது தயை உண்டாகின்றதோ அப்பொழுது அது தயை யென்று சொல்லப்படும்.

4. அவக்கிரதையாவது மூன்று கரணங்களாலு மொரேபடித்தா யிருப்பதுவே அவக்கிரதை யென்று சொல்லப்படும்.

5. வைராக்கியமாவது பிரமதேவர் முதற் ருவரை பரியந்தமுள்ள விடயங்களில் காகவிட்டையிற்போன்று அருசி யுண்டாவதே நிர்மலமான வைராக்கிய மென்று நிகழ்த்தப்படும்.

6. சவுசம் ஆந்தர சவுசமெனவும், பாகிய சவுச மெனவும் இருவிதமாம். அவற்றுள் தோயமும் மண் ணுங்கொண்டு காய மேவிய மலங்கழித்தல் பாகியசவுச மாம்; அகத்துள்ள அஞ்ஞானத்தை நீத்தல் ஆந்தரசவுச மாம். இஃதுடையானுக்குப் பாகிய சவுசம் தேவை யில்லை.

7. இடம்பமில்லாமையாவது கடவுட் டியானம் பூசை முதலியவைகளை யாவரும் பார்த்துக்கொண் டிரு க்கும்போது தான் நியமமாய்ச் செய்யவேண்டுமென்று பரமார்த்த புத்தியில்லாமல் யாவன் செய்கிறானோ அவன் இடம்பாசாரனென்று சொல்லப்படுவன்; அப்ப டிச் செய்யாமலிருப்பதே இடம்பமில்லாமையாம்.

8. சத்தியமாவது தான் நேரிற்கண்டதும் கேட் டதும்யாதோ அதனையே உரையாடல் சத்தியமென்பர். பிரஹ்மந்தான் சத்தியமென்று சொல்லுவதுஞ் சத்திய மேயாம்.

9. நிர்மமதையாவது காயாதிகளில் நானெதென்னும் திடமான புந்தியை விடுவதே நிர்மமதையாம். அந்த நிர்மமதையால் முத்தியை யடைவன்.

10. ஸ்தைரியமாவது குருவேதாந்த வசனங்க ளாற் றுணியப்பெற்ற அருத்தத்தி னுறுதியாய்ச் சித் தத்தை நிலைநிறுத்தச் செய்வதே ஸ்தைரியமாம். அது வலது ஆசுத்தை யலையாமலிறுத்துவ தன்று.

11. நிரபிமானமாவது வித்தை ஐஸ்வர்யம் தவம் ரூபம் குலம் வர்ணம் ஆசிரமம் முதலிய வைகளால் உதிக்கும் அகங்காரத்தை நீப்பதே நிரபிமானமாம்.

12. ஈசுரத்தியான பரத்வமாவது முக்கரணங்களாலும் விடயங்களிற் செல்லலை விடுத்துத் தனதான்ம ஸ்வரூபத்தை நிரந்தரஞ் சிந்திப்பதெ ஈசுரத்தியான பரத்வமென்று சொல்லப்படும்.

13. பிரஹ்ம வித்துக்களுடன் சகவாசஞ்செய்தலாவது தேகாதிகளைக் காப்பாற்றுந் தொழிலை விடுத்துப் பிரஹ்ம விசாரம் செய்துகொண்டிருக்கும் சற்புருடர்களுடன் சந்ததம் நிழல்போலக் கூடியிருப்பதே பிரஹ்மவித்துச் சகவாசமாகும்.

14 ஞான சாஸ்திரங்களில் மிகுந்த ஆசையாவது ஞானசாஸ்திரங்களில் யாதுயாது கூறப்பட்டுளவோ அவைகளில் கருமபுத்தியின்றி ஆசக்தியுறுதலே ஞான சாஸ்திரங்களில் மிகுந்த ஆசையென்று சொல்லப்படும்.

15. சுகதுக்கசமத்வமாவது தனம் நல்ல ஸ்திரீ முதலானவைகளடையுங்காற் சுகமென்னும் புந்தியும் சுரமுதலிய தடையுங்காற் றுன்பமென்னும் புந்தியும் இல்லாதிருப்பதே சுகதுக்க சமத்துவமாகும்.

16. மானத்தில் அனுசக்தியாவது, சிரேஷ்டனையும் பூசாயோக்கியனையும் நம்மை உலகறிந்து சன்மானம் செய்யவேண்டும் என்னும் ஆசக்தியை விட்டுவிடுவதே மானனுசக்தியென்று சொல்லப்படும்.

17. ஏகாந்தவாசமாவது நல்ல விசாரத்திற்கு ஜனங்கள் விக்கினமாகையால் தான் ஒருவனாய் நிர்ஜனப் பிரதேசத்திலிருப்பதே ஏகாந்தவாசமாகும்.

18. முமுட்சுத்துவமாவது சம்சாரபந்த விமோசனமானது சீக்கிரம் நமக்கெப்பொழுது உண்டாமென்னுங் கவலையோடுகூடிய அதிதீவிரபுத்தியே முமுட்சுத்துவமாம்.

(2) முற்கூறிய பிரஹ்மசர்யாதி தர்மங்களால் தோஷநிவர்த்தியின் பொருட்டுப் புத்தியைத் தண்டிப்பதே **தம** மென்று சொல்லப்படும். புத்திமான்களால் பாகியேந் திரியங்களினது தத்தம் விடயங்களின் பிரவிருத்தியைநிவர்த்திப்பதுயாதோ அதுமனோலயத்திற்குச் சாதனமான **தம** மென்று சொல்லப்படும்; இந்திரியங்கள் தமது விடயங்களிற் சுபாவமாய் பிரவர்த்திக்கும்போது மனமானது வாயுவை அனுசரித்த செந்தழலைப்போல அவ் விந்திரியங்களைத் தானேயனுசரித்துச் செல்லுகின்றது. இந்திரியங்களைத் தகையில் மனது தானே நிலைபெற்றுவிடும். அப்பொழுது சித்தந் தெளிவையு மடையும். சித்தந்தெளிவை யடைந்தாற்றான் புருடனுக்கு முத்தி சித்திக்கும்; வேறெவ் விதத்தானும் சித்திக்கமாட்டாது. சமஸ்த பாகியேந் திரியங்களினது நிரோதந்தான் மனப்பிரசாதத்திற்கு முக்கிய காரணமாகும். பாகியேந்திரியங்களை நன்றாய்த் தகைவதால் பாகியவிடய போகமானது மனதிற்கு விடுபட்டுப் போம். அவ்வாறு பாகியவிடயபோகம் விடுவதால் மனமானது துஷ்ட சுபாவத்தை தவிட்டுச் சிறிது சிறிதுசமத்தை மேவும். முத்தி இலக்கண மறிந்தவர்கள் சித்தத்தினதுபாகியவிடயமுத்தியைத்தான்முத்தியென்றறிகின்றார்கள். முமுட்சுவிற்கு சுலபமாய்ச் சித்தப்பிரசாதத்திற்குக் காரணம் தமத்தைவிட நாமொன்று மறியவில்லை. சித்தமானது தமத்தாலேயே தான் தனது சமஸ்த தோடத்தையும் விடுத்து விரைவிற் சாந்தியை யடை

கின்றது. பிராணாயாமத்தினாலும் தத்துவ திருஷ்டியாலும் சித்தத்திற்கு நிச்சலத்துவமும் பிரசாதமும் உண்டாகுமாறு உறுதியாய்த் திக்குத்தேசகாலங்களை யனுசரித்துச் செய்யப் படுகின்றவனுடைய தமமானது யாண்டுங் குறையுறாதாதலால் புத்திமானானவன் ஏமாந்திராமல் சித்தசாந்தியின் பொருட்டு மிகுந்த முயற்சியால் தமத்தைச் சம்பாதிக்கவேண்டும். சமஸ்த பாகியேந்திரியங்களுடைய விடயப் பிரவர்த்தியை நிரோதிப்பதாலும் போக்கிய பதார்த்தங்களிற் றோடத்தைப் பிரித்துப் பார்த்தலாலும் ஈசுரப் பிரசாதத்தாலும் சற்குரு கடாக்ஷத்தாலும் சித்தமானது சீக்கிரம் சாந்தியடையும்.

(3.) பிராரப்த கருமத்தால் வரப்பெற்ற தாபத்திரய துக்கத்தைச் சிந்திக்காமற் சகிப்பதே திதிக்ஷை யென்று சொல்லப்படும். முமுட்சுவிற்குத் திதிக்ஷைக்குச் சமமாய் இரக்ஷைசெய்வது யாதொன்று மில்லை. இத் திதிக்ஷா கவசம் இடியாலுந் தகராது. தீரர்கள் திதிக்ஷையைக் கவசமாகத் தரித்துக்கொண்டு சமஸ்தர்களையும் தம்வயத்தினராமாறு செய்துகொண்டு மாயையைத் திரணம்போ னினைத்துச் சயிக்கிறார்கள். திதிக்ஷை யுள்ளவர்களுக்குத் தான் யோகசித்தியும் ஆன்ம ராச்சிய லக்ஷ்மியின் சுகபோகசித்தியும் உளவாம். திதிக்ஷை யில்லாதவர்கள் விக்கினங்களாற் கெடுக்கப்பட்டுப் பெருங்காற்றினாலே மரங்களினின்றுஞ் சருகுகள்போலச் சிதறிப்போவார்கள். திதிக்ஷையாற்றான் தவம், தீர்த்தம், விரதம், சாஸ்திரம், போதம், ஐஸ்வரியம், சுவர்க்கம், முத்தி என்னுமிவைகளில் யாவன் யாவனுக்கு எதில் இச்சையுளதோ அவனவன் அவ்வதனை யடைகிறான். முற்கூறிய பிரஹ்மசர்யம், அஹிம்சை,

பெரியோர்களை நிந்தியாமை, அன்னியரால் செய்யப்பட்ட ஆக்ஷேபாதிகளைச் சகித்தல் முதலிய குணங்களெல்லாம் திதிக்ஷையுள்ளவனுக்குத் தான் சித்திக்கும். முத்திக்குச்சொல்லிய அனேக சாதனங்களுக்குள் உத்தமசாதனம் திதிக்ஷதான். யாதொரு திதிக்ஷையுள்ளவர்களிடத்தில் தெய்வீக பௌதீகமாய் விக்கினங்கள் விலகிவிடுகின்றனவோ, திதிக்ஷையுள்ள புருடன் தான் எத்தனித்த மார்க்கத்தில் எவ்விக்கினம் வரினும் அம்மார்க்கத்தை விடாமல் அனுட்டிப்பதால் அணிமாதி சித்திமுதலியவைகளையடைவன். ஆதலினால் முமுட்சுவுக்கு வாஞ்சித்த மோக்ஷம் சித்திக்க வேண்டியதினிமித்தம் திதிக்ஷையை மிகவும் சம்பாதிக்கவேண்டும். ஏனெனின், தீவிர முமுட்சுத் துவமும் உலகின்கண் ணுவர்ப்பும் திதிக்ஷக்கு முக்கிய காரணமாயுள. அவ்வக்காலங்களி லுண்டாம் வியாதிகளின் சாந்தியின் பொருட்டு பிரவிர்த்திப்பானாயின் அவ்வியாதிகளைப்பரிகரிக்கும் மருந்துகளைத் தேடிக்கொண்டு அந்தச் சிந்தையிற்றானே ஆசக்தனாவன். அவ்வாறாய யதியானவன் சிரவண முதலானவை யில்லாதவனா யிறப்பானேல் யாது பலம் சித்திக்கும்? அவன் இருவிதத்தினும் நழுவினவனாய்த் தனது முக்கியப் பிரயோசனத்தை இழப்பன். யோகாப்பியாசம் செய்துக்கொண் டிருக்குங்கால் சரீரம் நழுவிய சன்யாசி யானவன் புண்ணிய லோகங்களிற் சென்று அநேககாலம் சுகித்துப் பின்னரும் யோகிகளது குலத்திற் பிறந்து யோகாப்பியாசம் செய்வனென்று கீதையில் கிருஷ்ண பகவான் கூறி யிருக்கின்றனர். சன்யாசம் செய்து கொள்ள யத்தனித்துச் செய்து கொள்ளுமுன் சரீரம் நீங்கினும் புண்ணிய லோகத்தை அவன் அடைவனென்று பகவான் சொல்லி யிருக்கிறார். கேவலம்

சன்யாசம் பண்ணிக்கொண்ட மாத்திரத்தாற் சித்தியையடையா னென்றும் அனுஷ்டிக்க வேண்டிய கருமங்களை விட்டுவிட்டால் சித்தியுண்டாகா தென்றும் சொல்லியிருக்கிறார். ஆதலால், வாராநின்ற சகல துக்கங்களையும் திதிக்ஷையினாற் சகித்துச் சக்திக்குத் தக்கவாறு சிரவணாதிகளைச் சிறிது சிறிதேனும் செய்தேவரவேண்டும். வந்த துக்கங்களைச் சகிக்காமற் போனால் எத்தனைத்தாற் சாதித்த திதிக்ஷைக்கு ஒன்றும் பயனில்லை.

(4.) சுகசாதனமாகச் சொல்லப்படுகிற சகலயாகாதிகருமங்களையும் விதியாய்விடுவது உபரதி யென்பது சத்துக்களபிப்பிராயம். கருமங்களை ஒழியச்செய்வதென்னும் விற்பத்தியினாலே உபரதியென்று நியாஸம் சொல்லப்படுகின்றது. அந்தநியாசத்தால் சகலவிருத்த கருமங்களுடைய தியாகந்தான் வேதத்தாற் சொல்லப்படுகிறது. கருமத்தாற் சாதிக்கப் படுகின்றன வெல்லாம் அநித்தியமென்று அணிந்திருப்பதால் நித்திய பலமான பரமுத்தியை அபேக்ஷித்தவனுக்கு இக்கருமத்தால் ஆகவேண்டியதென்? கருமங்களாற் சாதிக்கக்கூடிய பலன்கள் உத்பாத்ய மென்றும் ஆப்யமென்றும் சம்ஸ்காரியமென்றும் விகார்ய மென்றும் நான்குவிதங்கள். இவை யொழிந் தன்னியமில்லை. பிரஹ்மமானது கூறிய நான்கனுள் ஒன்றென்று ஒருகாலுஞ் சொல்லுதற்காது. ஏனெனில், பிரஹ்மம் சுயமாகவே எப்போழுதும் இருக்கின்றது; எப்பொழுதும் அடையப்பட்டே யிருக்கின்றது; நிர்மலமாய்ச் சுத்தமாயிருக்கின்றது; கிரியையற்றிருக்கின்றது. அந்தப்பிரஹ்மத்தையுண்டு பண்ணுகிறவன் எவனுமில்லையென்று வேதம் உத்பத்தியை நிஷேதிக்கின்றதால்பிரஹ்மம்காரணமே தவிர ஒன்றன் காரியமன்று. அடையும் புருடனுக்கும்

அடையப்பட்ட பொருளுக்கும் பேத மிருக்குமாகில் அவ்வடைய வேண்டியவத்து அப்புருடனு லடையப் படும். ஈண்டு, அடைபவனுடைய சொரூபமாகவே அந்தப் பிரஹ்மமிருப்பதால் அது ஒருபொழுது மடையக்கூடிய வத்துவாகாது. அழுக்குநிறைந்த கண்ணாடி முதலியவற்றிற்குத்தான் றுடைப்பதுமுதலியசம்ஸ்காரம் வேண்டும்; ஆகாசம் போல நித்தியசுத்தமா யிருக்கும் பிரஹ்மத்திற்கு சம்ஸ்காரம் வேண்டியதேயில்லை. மலமில்லாமலுங் கிரியை யில்லாமலும் உள்ளவஸ்து தோஷமுள்ள எவ்வத்துவோடு சம்பந்திக்கும்? ஒன்றனது சம்பந்தத்தால் வந்த தோஷத்தை யல்லவா சம்ஸ்காரம் நிவர்த்திக்கும். கேவலமென்றுங் குணமற்ற தென்றும் வேதத்திலோதும் பிரஹ்மத்திற்குக் குணசம்பந்த மெப்படிச்சம்பவிக்கும்? அவயவத் துடனும்பரிணாமத்துடனும் கூடின பால்முதலியவைகட்கு ஒன்றனால்விகாரம்பொருந்தும்;நிரவயவமாய் நிஷ்கிரியமாய் அபரிணாமியாய் இருக்கும்பிரஹ்மத்திற்கு விகாரமுண்டாக மாட்டாது. நிட்களமென்றும் நிட்கிரியமென்றும் சாந்தமென்றும் நிரவத்யமென்றும் நிரஞ்சனமென்றும் பிரஹ்மத்திற்கு ஸ்வரூபம் சுருதி யுக்திகளால் நிர்ணயிக்கப்பட்டுளது. ஆதலால் பிரஹ்மமானது கருமத்தா லொருபொழுதும் சாதிக்கக் கூடியதன்று. கருமத்தா லடையக்கூடிய தெல்லாம் அநித்தியம். பிரஹ்மமோ நித்தியம். கருமத்தாற் சம்பாதிக்கப்பட் டிருக்கு மித்தேகமுதலிய பிரபஞ்சம் எப்படி நசிக்கின்றதோ அப்படியே புண்ணிய கர்மத்தா லடையப்படுகின்ற சுவர்க்காதி உலகங்களும் நாசமுள்ளன; யாண்டு மநித்தியமாதற்குக் காரணம் கருமத்தா லடைதலும் காரியரூபமாயிருத்தலும் என்பது சித்த

மாதலால் அநித்தியமான சுவர்க்கமுதலானவற்றில் தெரிந்தவன் யாவன் மோகத்தை யடைவன்! சகத்திற்குக் காரணமாய வத்து நித்தியமென்பது எம்மதத்திற்கும் சம்மதமாம். சகத்தை லயம் செய்வது பிரஹ்மமென்று அடிக்கடி வேதம் விளம்புகின்றது. தோன்றப்பட்ட சமஸ்த சகத்திற்கும் ஆத்ம ஸ்வரூபந்தான் ஸ்வரூபமென்றும் அது சத்தியமென்றும் சகத்திற்குக் காரணமென்றும் சத்ரூபமென்றும் நித்தியமென்றும் வேதம் அதி ஸ்புடமா யறைகின்றது.

கர்மத்தாலுந் தனயராலும் தனத்தாலும் முத்தியை யடைதல் பொருந்தா தென்று வேதம் நேராகக் கருமம் முத்தி யேதுவல்ல வென்பதால் நிஷேதிக்கின்றது. பிரத்தியக் பிரஹ்மங்களுடைய ஸ்வரூபவிசார பூர்வகம் அவ்விரண்டு மொன்றுதா னென்று சாக்ஷாத்கரித்த ஞானத்தினலே புருடனுக்குப் பரபிரஹ்மாத்மபாவ ரூபமான முத்தி சித்திக்கின்றது. அஃதன்றி அம்முத்தியானது ஸ்நானங்களாலும் கீர்த்தனங்களாலும் செபங்க ளாலும் கிருச்சிர சாந்திராயணங்க ளாலும் யாகஹோமதானங்களாலும் சாஸ்திரங்களாலும் மந்திரங்களாலும் உண்டாகாது. ஞானத்தாலேயே மோக்ஷம் உண்டென்று சுருதியாற் கூறப்படுகின்றது. முத்திக்குக் காரணமான ஞானம் யாதொன்றையு மபேக்ஷிக்காமல் சகலத்தையு நீக்கித் தான் மாத்திரங் காரணமாமென்று தேற்றமாகிய அவதாரணத்திற் கருத்தமாம். விவேகியாயும் விரக்தனாயும் பிரஹ்மஸ்வரூபமே நித்தியமென் றறிந்தவனாயும் அந்தப் பிரஹ்மமே தானாகவேண்டுமென்னும் இச்சை யுள்ளவனாயும் இருக்கின்றவனுக்குப் பஞ்சவிஷயங்களிலும் அவற்றிற்குச்சாதனமான கிரியைகளிலும் என் ஆசக்தி உண்டாம்? ஆதலி

னல், அநித்தியமான சுவர்க்காதிகளுக்குச் சாதனமாகக் கூறிய நித்திய நைமித்திய ரூப சகலகருமங்களையும் அவற்றிற்குச்சாதனமாயுள்ள ஸ்திரீ முதலான விடயங்களையும் பிரஹ்மபாவத்தை யிச்சித்துக்கொண்டிருக்கிற முமுட்சுவானவன் சுத்தமாய் விட்டுவிட வேண்டியது. இருகரங்கள் புருடனுக்குத் தனது காரியத்தைச் சாதித்துக் கொடுக்கின்றன போன்று முமுட்சுவுக்கும் கர்மமும் சிரவணமும் ஞானத்தைச் சாதித்துக் தருவதில் யாது தடையுளது? எவ்வாறு தீபமானது தூண்டுவதினாலே நன்றாகப் பிரகாசிக்கின்றதோ அவ்வாறு சிரவணத்தாலுண்டாகின்ற ஞானம் விஹித கர்மானுஷ்டானத்தால் நன்றாய்ப் பிரகாசிக்கலாமே! ஆதலால், கர்மத்தை யபேக்ஷித்த ஞானம் அல்லது கர்மம் ஞானம் என்னுமிரண்டும் சேர்ந்து முத்திக்குச் சாதனமென்று பூர்வவாதிகள் கூறுகின்றனர். முமுட்சுவுக்கு விஹிதகர்மத்தியாகம் எவ்வாறு கூடுமென்று தெரியாதார் போல தெரிந்தோரும் சங்கிக்கத் தேவையில்லை. ஏனெனில், கர்மத்திற்குப்பலம்வேறு சிரவணத்திற்குப் பலம்வேறு; கர்மத்திற்கு அதிகாரிவேறு சிரவணத்திற் கதிகாரி வேறு; இவ்வாறு அவ்விரண்டு சாதனங்களுக்கும் விலக்ஷணபலமு மதிகாரியுமா யிருக்கின்றன. அஃதெவ்வாறெனில்? கர்மத்தி லதிகாரமுள்ளவன் காமமுள்ளவன்; சிரவணத்தி லதிகாரியோ நிட்காமி. கர்மிக்கிலக்கணம் தனிகனும் தேகத்திற் சக்தியுள்ளவனுமா யிருக்க வேண்டும். முமுட்சுவிற் கிலக்கணமோ கர்மத்தாலுண்டாகின்ற உலகங்கள் ஐஸ்வரங்களென்று அதிலாசையைவிடவேண்டும் என்பது முதலனவாம்; மோக்ஷத்திலதிகாரி சன்யாசி; கர்மத்திலதிகாரி கிரகஸ்தன். கர்மத்திற்குச் சாதனம் பாரியை; உபகரணங்கள் ஸ்ருக்

ஸ்ருவாதி மாப்பாத்திரங்கள். சிரவணம் செய்பவன் குருவைத்தவிர வேறொரு சாதனமு மபேக்ஷிக்கவேண்டிய தில்லை. கர்மத்தால் மேலும் மேலும் அகங்காரம் விர்த்தியாகின்றது; சிரவணத்தாற் பிரதி க்ஷணமும் அகங்காரம் நிவர்த்தியாகின்றது. கர்மசாஸ்திரம் பிரவிர்த்தியையுண்டுபண்ணுகிறது; ஞானசாஸ்திரம்நிவிர்த்தியை யுண்டுபண்ணுகிறது; இவைமுதலிய வேற்றுமைகள் அந்தந்தச் சாதனங்களில் அந்தந்த வதிகாரிக்கு ஒன்றற்கொன் றிருக்கின்றன. கருமிக்கும் ஞானிக்கும் பரஸ்பரம் ஒருபொழுது மபேக்ஷையில்லை. அவ்வாறே சாதனங்களான கர்மத்திற்குஞ் சிரவணத்திற்கும் பரஸ்பரம் அபேக்ஷையில்லை. ஞானமானது மேலானகதியைத் தருகிறது; கருமமானது கீழான கதியைத் தருகிறது. அவ்வாறாக, இவ்விரண்டிற்கும் பரஸ்பரம் சகாயந்தான் யாதின்பொருட்டு? அல்லது இரண்டுந்தான் சேர்ந்து ஆகவேண்டுவதென்? எவ்வாறு அக்கினிக்குஞ் சருகினீட்டத்திற்கும் ஒளிக்கு மிருட்கும் ஒரு தேசத்தில் வாசம் சம்பவியாதோ அவ்வாறே ஞானத்திற்குங் கருமத்திற்கும் சகவாசம் சம்பவிக்காது. யாதொரு ஞானத்தின்முன்னே கருமம்சயம் பிரகாசத்தை யடையாதோ அவ்வாறாய கர்மமானது தனது விரோதியான ஞானத்திற்கு யாதுசகாயத்தைப் புரியும். விறகுமுதலானதாற் சொலித்துக்கொண்டிருப் பினும் மிகுந்த அக்கினி எவ்வாறு ஸ்வயம்பிரகாசனு யிருக்கின்ற சூரியனுக்குச் சிறிதும் உபகரிக்கவேண்டியதில்லையோ அவ்வாறே அனேகங்கோடி கருமங்களாலும் ஞானத்திற்குச் செய்ய வேண்டியது யாதொன்று மின்று. அவ்வக்கினி தானே அணைந்து போவதுபோன்று கருமமும்தானே நசித்துப்

போகின்றது. கரங்களிரண்டும் ஒருகர்த்தாவை யாசிரயித்துக்கொண்டு கருமத்தில் அதிகிருதங்களா யிருப்பதால் அவைகள் ஒன்று சேர்ந்திருப்பது யோக்கியம் (பொருந்தும்). அவ்வாறு கர்மத்திற்கும் ஞானத்திற்கும் கர்த்தா பின்னமா யிருப்பதால் சகயோகம் பொருந்தாது. கர்மமானது கர்த்தாவால் செய்யவாவது செய்யாதிருக்கவாவது செய்விக்கவாவது கூடும். அவ்வாறு வஸ்து ஞானமானது ஒருபொழுதுங் கருத்தாவின் சுவாதீனமன்று. எவ்வாறு வஸ்துவோ அவ்வாறே ஞானமானது பிரமாணத்தால் உண்டாகின்றது. அது கர்மத்தையாவது யுக்திசாமர்த் தியத்தை யாவது சிறிது மபேக்ஷிக்கிறதில்லை. ஞானமானது வஸ்துதந்திரமாயிருந்தால் சம்சயமுதலியன உண்டாகலாகாது; அவ்வா றுண்டாவதால் ஞானம் வஸ்து தந்திரமன்றென்று தெரிந்தவர்கள் சங்கிக்கத் தேவையில்லை. சுருதிப் பிரமாணமன்றியி லிருக்கிற சம்சயமானது வாஸ்தவமன்று. வேதப் பிரமாணத்தாற் பிரசித்தமாயிருக்கிற ஞானம் வாஸ்தவந்தான். வஸ்துவானது பரப்பிரஹ்மம்; அது நித்தியம், சத்தியம், நிச்சலம், வியாபகம்; அதன் ஞானமானது வேதப்பிரமாணத்தாலுண்டாக வேண்டியதே தவிர வேறொன்றையும் அபேக்ஷிப்பதில்லை. எவ்வாறு உருவ ஞானமானது கண்ணன்றி யிருந்தா லுண்டாகின்றதோ அவ்வாறு சுருதிப் பிரமாணத்தால் வஸ்து ஞானம் யதார்த்தமாயுண்டாம். எவ்வாறு புருடனுடைய நேத்திரமானது உருவத்தை யறிகின்ற விடயத்தில் சாதனாந்தரத்தைச் சிறிது கூட அபேக்ஷிக்கவில்லையோ அவ்வாறு சிரவணாதியா லுண்டாகின்ற ஞானமானது வஸ்துவைப் பிரகாசிக்கின்ற விடயத்தில் கருமத்தை அபேக்ஷிக்கிற

தில்லை. கர்த்தாவின் அதீனமாகுங்கருமம், கருமத்தின் அதீனமாகுஞ் சுகதுக்க பலன்கள், வேதாதீனமாகும் ஞானம், மாயையின் அதீனமாகு மிச்சகத்து. வித்தையு மவித்தையுஞ் சேர்த்துப் பரஸ்பரம் உபகாரமுள்ளதாய்ச் சொல்லியிருப்பது நல்ல கருமத்தையும் உபாசனையையுமே தவிர ஆன்மஞானத்தையுங் கருமத்தையுஞ் சேர்த்து ஓரிடத்திலுஞ் சொல்லவில்லை. நித்தியா நித்திய பதார்த்தஞான மில்லாதவனும் இவ்வுலகிலும் லோகாந்தரத்திலும் மாலை சந்தன வனிதாதி விடயானுபவ ஆசையுள்ளவனும் உபரதி யடையாதவனு மாயவன் யாவனோ அச்சடனுக்குத்தான் வேதத்திற் கருமம் விதிக்கப்பட் டிருக்கிறதே தவிர எவ்வாசையுமற்று முத்தியில் இச்சையுள்ளவனும் பரமானந்தத்தை வேண்டிக்கொண் டிருக்கும் புத்தியுள்ளவனுமாய புருடனுக்கு விதிக்கவில்லை. மோக்ஷச்சையால் எந்தத்தினத்தில் விரக்தியடைகின்றானோ அத்தினத்தே அந்த முமுட்சுவான புருடனுக்குச் சன்னியாசம் விதிக்கப்பட் டிருக்கிறது. அவ்வாறே உத்தமமான வேதஞ் சொல்லுகின்றது. ஆகையினால், புத்திமான்களால் இச்சந்நியாசமானது பிரமாணசித்தமென்பதாய் மனத்தின்கண் ணிச்சயிக்கத் தக்கது. சர்வஞ்ஞனுயிருக்கிற பகவானும் ஆத்மசாக்ஷாத்கார சாதனங்கள் வேதம் தபசுமுதலியன அல்லவென்று நிஷேதித்தருளியிருக்கின்றார். பிரவர்த்தி மார்க்கத்தையும் நிவர்த்தி மார்க்கத்தையும் வேதம் விளம்புகின்றது. பிரவர்த்தியால் பிராணி பந்தத்தை யடைகின்றான்; நிவர்த்தியால் முத்தனாய் விடுகின்றான். மூடனா யிருக்கப்பட்டவனுக்கும் கட்டுப்பட்டுக் கட்டப்படுவது யாண்டும் சம்மதமில்லாததால், மோக்ஷத்தில் இச்சை கொண்டிருக்

கிறவர்கள் நிவர்த்தியென்னும் கர்மசன்யாசம் பண்ணிக்கொள்ளவேண்டும். ஞானமுங் கருமமும் சேர்ந்து ஓரிடத்தி லிருக்கவொண்ணாது; ஆதலால் ஞானத்திச்சையுள்ளவன் கருமத்தை விட்டுவிடவேண்டும். இஷ்டசாதன புத்தியால் ஒருவஸ்துவைக் கிரகித்து அதிலனர்த்தத்தை யறிந்தானே யானால் எவன்றான் பின்னரும் அவ்வத்துவை விரும்புவன். உபரதியென்னும் சப்தத்திற்கு முன்கண்ட விடயவிருத்திகளினின்றும் ஒழிவதுதானருத்தம். அந்த உபரமமென்பது விருத்திபேதத்தால் முக்கிய மென்றுங் கௌணமென்று மிரண்டுவிதமாம். அவ் விருவகையிற் சித்தத்தினது திருசிய விருத்திப் பரித்தியாகமே முக்கியமாம்; சிரவணத்திற் கங்கமாய கருமசந்யாசமே கவுணமாம். புருடனுக்கு முக்கியோபரமஞ் சித்திக்கும் பொருட்டு அதனங்கமாய கவுணோபரமத்தை அவசியமாசிரயிக்கவேண்டும். ஏனெனில் அங்கயீனமா யிருந்தால் பிரதானம் சித்திக்கமாட்டாது. இகபர விடயங்களினின்றும் விரக்தனுய்ச் சந்யசித்துக் கொள்ளவேண்டும். அவ்வாறு விஷயசுகத்தில் விரக்தியில்லாதவனுக்குச் சந்யாசமானது அயோக்கியன் செய்யும் யாகம் போன்று நிஷ்பலமாகும். சன்யாசித்துக்கொண்டு யதியானபின் முன்னிருந்த அந்தவந்த விடயங்களை மனதினினைக்கக்கூடாது. அதை ஸ்மரிப்பதால் யதிக்கு நிந்தையே உண்டாகின்றது. ஆதலால் அதை அவசியம் ஸ்மரிக்கக் கூடாது.

(5.) குருவாக்கியத்திலும் வேதாந்த சாஸ்திரத்திலும் மெய்யென்னும் நிச்சயபுத்தி யாதொன்றுண்டோ அதுவே முத்திசித்தியின் முக்கியகாரணமான சிரத்தையாம். சிரத்தையுள்ள சற்புருடர்களுக்குத்தான் சொல்

லப்பட்டிருக்கும் புருடார்த்தம் சித்திக்கும்; மற்றையர்க்குச் சித்தியாது. பரமார்த்த தத்துவ ரூபம் அதிசூட்சுமமா யிருப்பதால் இதிற்சாதுவே சிரத்தை வையென்று சுருதி சொல்லுகின்றது. சிரத்தை யில்லாதவனுக்கு நல்ல காரியத்திற் பிரவர்த்தி வரமாட்டாது. பிரவிர்த்தி யில்லாதவனுக்குச் சாத்தியமான கதியினது சித்தி யுண்டாகாது; அசிரத்தையாற் கெடுக்கப்பட்டுத்தான் உலகத்தில் யாவரும் சம்சாரமாகின்ற மகாசமுத்திரத்தில் மூழுகுகின்றார்கள். புருடனானவன் தெய்வத்தி னிடத்திலும் வேதத்தி னிடத்திலும் குருவினிடத்திலும் மந்திரத்தினிடத்திலும் தீர்த்தத்தினிடத்திலும் மகாத்மாக்களிடத்திலும் வைத்தியனிடத்திலும் எவ்வாறு எவ்வாறு சிரத்தைவைக்கின்றானோ அவ்வாறு அவ்வாறுதான் பலஞ்சித்திக்கும். சத்தியமாயிருக்கின்ற வஸ்துவொன்று நிச்சயமாயுண்டென்றே யறியவேண்டும். அந்தவஸ்து நிச்சயமானது சாஸ்திரத்திலுள்ள சிரத்தையாற்றான் உண்டாகவேண்டும். ஆகையினாலே, குரு வேதாந்த சாஸ்திரங்களில் சிரத்தையை நன்றாகச் சம்பாதித்துக் கொள்ளத்தக்கது. சிரத்தையுள்ள முமுட்சுவிற்குத் தான் முத்தியாகிய பலம் சித்திக்கும்; வேறொருவனுக்குஞ் சித்திக்காது. மெய்சொல்வது புருடனுக்குச் சிரத்தை யுண்டாவதின்காரணமாம். வேதம் பரமேஸ்வர வாக்கிய மானதால் மெய்யென்பதிற் சம்சயமில்லை. சீவன்முத்த ஞானவன் ஈஸ்வர ரூபமான படியால் குருவின் வாக்கும் ஈஸ்வரன் வாக்கைப் போன்றதே. ஆதலால், குரு ஈஸ்வர வாக்கியங்களில் புத்திமான்களுக்குச் சிரத்தை சித்திக்கின்றது.

(6.) வேதத்தாற்சொல்லப்பட்ட அர்த்தத்தை ஸ்திரமா யறிவதற்காகப் புத்திமானாலே ஏதாவது தெரிந்த

வஸ்துவினிடத்திற் சித்தத்தைச் செவ்வனே நிலை நிறுத்துவது சமாதான மென்று சொல்லப்படும். சித்தஞ் சாத்தியமாய வத்துவில் ஆசக்தி யுத்தமாயிருப்பதே புருஷார்த்தம் சித்திக்கின்றதற்கு முக்கிய காரணம். அவ்வாறின்றி, மனது சிறிது அஜாக்ரதையை யடைந்தாலும் சாத்தியம் சித்திக்கமாட்டாது. புருஷயத்தினமும் வீணாய்ப்போம். வேடனானவன் எவ்வாறு மனங் கண் கையில் பாணம் இவைகளை ஒரேகுறியாய் வைத்து இலக்ஷியத்தைப் பேதிக் கின்றானோ சிறிது அஜாக்ரதையா யிருந்தாலும் பாணப்பிரயோக மெவ்வாறு வீணாய்ப் போமோ அவ்வாறே முத்தி சித்திப்பதற்குச் சித்தசமாதானமே முக்கிய காரணமா யிருப்பதால் முமுட்சுவானவன் எப்பொழுதுஞ் சித்த சமாதானத்தைச் செய்யவேண்டும். அச்சித்த சமாதானத்திற்கு விடயங்களிற் றீவிர வைராக்கியமும் பிரஹ்மானந்தத்தில் மகத்தான ஆசைகொள்வதுமாய இவ்விரண்டுங் காரணங்களாம். வேதமானது பிரஹ்மசர்ய முதலான வற்றை முக்திக்குப் பகிரங்க சாதனங்களாகவும் சமாதிசட்கத்தை அந்தரங்க சாதனமாகவும் சாற்றுகின்றது. பகிரங்க சாதனத்தைக் காட்டிலும் அந்தரங்கசாதனம் பலவானாதலினாலே முமுட்சுவுக்கு அந்தரமான சமாதி சட்கம் அவசியம் வேண்டியது. அந்தரங்க சாதனமில்லாத முமுட்சுவிற்கு சிரவணம் கோடி ஆவிர்த்தி செய்பினும் போர் செய்பவனுக்குத் தைரியமில்லாமற்போனால் அனேக அஸ்திரங்களிருந்தாலும் எவ்வாறு வெற்றியுண்டாகாதோ அவ்வாறு மோக்ஷஞ் சித்தியாது.

(iv.) பிரஹ்மாத்மைகத்வ ஞானத்தால் வித்துவானானவன் சம்சார பாசபந்தத்தை நீக்கிக்கொள்ள இச்சிப்ப

தால்அவனுக்கு முமுட்சுவென்று பெயர் சொல்லப்படு கின்றது சமஸ்தசாதனங்களுக்குள் முமுட்சுதை மூல சாதனமாகும். மோக்ஷந்தி லிச்சையும் அதற்பிரவிர்த் திபு மில்லாதவனுக்குச் சிரவண மெவ்வாறுண்டாம்? பலமான முத்திதா னெவ்வாறுண்டாம்?

அந்த முமுக்ஷுத்துவமானது தீவிரமென்றும், மத்திமமென்றும், மந்தமென்றும், அதிமந்தமென்றும் நான்கு வகைத்து.

1. அநேகவித தாபத்திரயங்களாற் றபிக்கப்பட்டு அதனாலலைவடைந்த மனதுள்ளவனுமா யெல்லாச் சம் சாரத்தையும் அனர்த்தமென்னும் புத்தியால் விட்டு விடுவதுதான் தீவிர முமுட்சுத்துவ மாம்.

2. தீவிரமாயிருக்கிற தாபத்திரயாதிகளைப் பார்த் தும் புத்திர களத்திரர்களைத் தியாகம்பண்ணமாட்டாத வனு யிரண்டு விதத்திலும் மனதிற்கு அலைவுண்டா வதுவே மத்திம முமுக்ஷுத்துவ மாம்.

3. மோக்ஷத்திற்கு யின்னுங் காலமிருக்கின்றது; இப்போதெனக்கு யாதவசரம்? போகங்களை யெல்லா மனுபவித்துச் செய்யவேண்டிய வெல்லா வற்றையுஞ் செய்துமுடித்துப் பின்பு மோக்ஷத்திற்காக முயற்சி செய்யப் போகிறேனென்று புத்தியுண்டாவது தான் மந்த முமுக்ஷுத்துவ மாம்.

4. மார்க்கத்திற் சென்றுகொண் டிருப்பவனுக்கு இரத்தின மகப்படுவது போன்று மோக்ஷமானது நமக்கு லபித்தால் அப்போது கிருதகிர்த்தியனுவேன் என்று புத்திஹீனத்தாற் சிந்திப்பதே அதிமந்த முமுக்ஷுத்துவ மாம்.

அனேக ஜன்மங்களில் தபசினலே ஈஸ்வரனை யாராதித்து அதனால் மனேமலங்களை வேருடன் களைந்தவனும், சாஸ்திரங்களை யறிந்தவனும், குணதோஷங்களை யறிந்தவனும், எந்த போக்கிய வஸ்துக்களினு மாசையற்றவனும், நித்தியா நித்திய பதார்த்தங்களை யறிந்தவனும், முக்தியிலாசை யுள்ளவனும், திடமான விரத முள்ளவனுமானவன் அக்கினியாற் றபிக்கப்பட்ட பாத்திரத்தைக் கரத்தாலெடுத்தவ னெவ்வாறு விரைவிலெறிந்துவிடுவனே அவ்வாறு தீவிர மோக்ஷவிச்சையா லில்லமுதலானவற்றை விட்டுவிடுவன். அவனே குருவி னனுக்கிரஹத்தா லுடனே சம்சார சாகரத்தைத் தாண்டுவன்.

எப்புருடன் தீவிரமுமுக்ஷுவாக விருக்கின்றனே அவ னித்தேகமுள்ள பொழுதே முத்தனவன்; மத்திம முமுக்ஷுத்துவமுடையவன் மறு ஜென்மத்தில் முத்தியையடைவன்; மந்த முமுக்ஷுத்துவ முள்ளவன் யுகாந்தரத்தில் முத்தனவன்; அதிமந்த முமுக்ஷுத்துவ முள்ளவன் கற்பகோடிகாலத்தினு முத்தியடையான்.

பிராணிக்கு மனுஷிய ஜன்ம மதிதுர்லபம்; அதினும் புருஷனய் ஜனிப்பது மிகவுந் துர்லபம்! அதினும் விவேகமுண்டாவது மஹாதுர்லபம்; இவ்வாறு மிக்க துர்லபமான மனிதத்தன்மை, புருடத்தன்மை, விவேகத்தன்மை யென்னு மிம்மூன்று தன்மைகளையு மடைந்த மஹாத்மாவானவ னுடனே விரக்தனய் முத்தியையடையும் பொருட்டு முயற்சிக்கவேண்டும். புத்திர மித்திர மனைவியாதியால் ஜன்மந்தோறும் சுகங்களைப் புருடனடைந் திருக்கின்றனன். ஆனல்,

மனுஷியத்தன்மையும், புருஷத்தன்மையும், விவேகமு மடைதலன்றோ அருமை;மிகவுந்துர்லபமான மனுஷிய ஜன்மத்தையும் புருஷ சரீரத்தையும் சதசத் விவேகத் தையும் அடைந்தும் இவ்விஷயசுகத்திற்றானே ஆசை யுள்ளவனாய்க் காலத்தைக் கழிப்பானே லந்த புருடா தமனான துர்ப்புத்தியுடன்கூடியவனது ஜன்மம் நிந்திக் தக் கதகதே. நாய் பன்றி கழுதை இவைகளுங் கூடச் சாப்பிடுகின்றன. சாப்பாடு அவைகளுக்கு மகப்படுவத னாற் பசியைத்தீர்த்துச் சந்தோஷிக்கின்ற எவர்களு டைய மனோவிருத்தியானது அவைகளுக்குச் சமான மாக விருக்கின்றதோ வவர்களுக்கு மவைகளுக்கும் வேற்றுமை யென்னை? எதற்குள் வியாதியான திவனைப் பற்றவில்லையோ, எதற்குள் வயோதிகமான திவனைக் கிட்டவில்லையோ, எதற்குளிவனது புத்தி தடுமாற்றங் கொள்ள வில்லையோ, எதற்குள் இவனுக்கு மரணம் நேரிட வில்லையோ அதற்குள் சுவஸ்தனா யிருக்கிற காலத்திலேயே விவேகமுள்ள புருடனானவன் சாரத் தைக் கிரஹித்துச் சம்சாரபந்தத்தை விடுவித்துக் கொள்ளச் சீக்கிர முயற்சிக்கவேண்டும்.

தேவதைகள், இருடிகள், பிதுர்க்கள், மனுஷியர்க ளாகிய இவர்களுடைய கடன் விடுத்தவர்களுலகிற் கோடிபேர்களுளர். சம்சார பந்தத்தினின்றும் விடுபட் டவனெவனோவவனொருவனே பிரஹ்மக்ஞானியாவன். அவ்வாறாய பிரஹ்மக்ஞானி திரிவிதவுலகத்தினுமரிது. உள்ளே யிருக்கின்ற மனோபந்தத்தால் கட்டுப்பட்டிருக் கின்றவனுக்கு வெளியில் தேவாதிகளாலுண்டாயிருக் கும் பந்தவிமோசனத்தா லென்னசுகமுண்டாம்? ஆதலி னால் உட்பந்த விமோசனத்தின்பொருட்டு சமர்த்தனா லெத்தனஞ்செய்யப்படுந் தீவிர மோக்ஷவிச்சையானது

பிரபலமான முயற்சியாலேயே முடியும். எந்த மோக்ஷ விச்சையில் பிரயத்தினங் காணப்படவில்லையோ அந்த மோக்ஷ விச்சையானது அபிநயமாத்திரமே தவிர பயனுடையதன்றாம். எவ்வாறு நாயகனுடன் அநுமரணஞ் செய்யத்துணிந்து மனோதிடமாயிருக்கின்ற பதிவிரதைக்கு வீடுமுதலானவற்றைத் துச்சமாய் நினைத்துப் பரம சுகத்திற்காக நாயகனுடன் அக்கினியிற் பிரவேசிப்பதி லெவ்வாறுமனது தீவிரப்படுமோ அவ்வாறுதீவிரப்படுவதுதான் மோக்ஷேச்சையான பல சித்திக்குக் காரணமென்று முமுக்ஷுவானவ னறிந்து துணிய வேண்டும். இந்த மோக்ஷேச்சையாகியபலஞ் சித்திப்பதற்குநித்தியாநித்திய விவேகமும் சரீரம் க்ஷணபங்குரமென்னும் புத்தியு மரணகாலத்தில் மிருத்யுவால்வருந் துயரிற் பயமு மதனாலுண்டாம் பரிதாபமுமாகிய விந் நான்குமே காரணம். விவேகமாகின்ற சிரமுந் திடவைராக்யமென்கின்ற தேகமுஞ் சமதமாதிகளாகின்ற வங்கங்களுமுமுக்ஷுத்துவமாகின்ற பிராணனுமுள்ள ஜிஞ்ஞாசுவானவன் யுக்தியிற் சமர்த்தனாய்ச் சூரனாய் நல்ல ஞானமாகின்ற கத்தியினாலே ஜனனமரண சம்சாரமாகின்ற மிருத்யுவை நிச்சயமாகவெட்டிப்போடுகின்றான். கூறிய சாதனங்களோடு கூடிய ஜிஞ்ஞாசுவாகிய சந்யாசியானவன் ஆன்மஸ்வரூபத்தை யறிந்துகொள்வதற்காகப் பத்திரபுஷ்ப பலாதிகளோடு கூடிய பாணியனாய் வணக்கத்துடன் குருசந்நிதானத்திற் செல்லவேண்டும். எந்தக் குருவானவர் சுரோத்திரியராயும் பிரஹ்மநிஷ்டையுடையவராயுஞ் சாந்தராயும் சமதரிசியாயும் மமதையற்றவராயும் அகங்காரமற்றவராயுஞ் சுகதுக்காதி துவந்துவமில்லாதவராயுஞ்சமர்த்தராயுஞ் சமுத்திரம்போன்று கபாரசபூரிதராயு மிருக்கின்றாரோ அந்த

பிரஹ்மஞானியாகிய குருவை ஆத்மஸ்வரூபத்தை யறியவேண்டுமென்னு மிச்சையுள்ளவன் தன்னிஷ்ட சித்தியின்பொருட்டு முயற்சியோடு நிரந்தரஞ் சேவிக்கவேண்டியது. அனேகஙகோடி ஜன்மங்களில் நல்ல சிரத்தையோடும் பக்தியோடுங் கூடிய சிடனால் பூஜை செய்யப்பெற்றுச் சந்தோஷித்த ஈசுவரன் தயவினால் வேதத்திற்சொல்லிய லக்ஷணங்களோடும் விதிப்பிரகாரமாயும் பக்தர்களாலே செம்மையா யாராதிக்கப்பட்டும் குருரூபமாகவந்து பிரத்தியக்ஷமாய்க் கருணையாற் றத்துவார்த்தத்தை நன்றாகப் போதித்து அந்தப்பக்தர்களை சம்சார சமுத்திரத்தினின்றுங் கரைபெறும்படிச் செய்விக்கின்றார். அவித்யாரூபமான மனதிலுள்ள மலபந்தத்தினின்றும் மோக்ஷமானது எந்த மஹானுபாவரால் உண்டாகின்றதோ அந்த மஹானுபாவரைத்தான் குருவென்று குரு சப்தத்தின் பொருளறிந்தவர்கள் கூறுகின்றனர். பரசிவனே குரு; குருவே பிரத்தியக்ஷமான சிவபெருமான்; இவ்விருவருக்கும் பேதத்தை முமுக்ஷு பார்த்தல் கூடாது. சம்சார பந்தத்தினின்றும் விடுபட்டவரும் பிரஹ்மநிஷ்டருங் கிருதகிருத்தியருமான குருவை பஜிக்கவேண்டும்; யாதொரு தேசிகரது பிரசாதத்தினால் சம்சார சமுத்திரமானது ஆன்குளப்படி போன்று சுலபமாய்த் தாண்டப்படுமோ வப்படிப் பட்ட குருவினிடத்தில் சிடன் செய்யும் பிரார்த்தனையினாலும், பணிவிடையினாலும், பக்தியினாலும், நமஸ்காரங்களினாலும், வணக்கத்துடன்பேசுவதினாலுங் குருவைப் பிரசன்னராகும்படிச்செய்து அவரிடத்தில் தானறிந்துகொள்ள வேண்டியதைக் கேட்கவேண்டும். ஹே! பகவானே! சமுத்திரம்போற் கருணையுடைய ஸ்ரீகுருமூர்த்தியே! அதிசுலபமாக

சமுசார சாகரத்தைத் தாண்டத் தாங்க ளோட மாக விருக்கின்றீர்கள். எந்த ஓடத்தை யாசரித்துத் தெரிந்தவர்கள் மோக்ஷமான கரையை யடைந்திருக்கின்றார்களோ, ஜென்மாந்தரங்களிற் செய்யப்பட்டிருக்கின்ற அனந்த புண்ணிய கர்மங்களுக்குப் பயனடையுங்கால மிப்போதுதான் எனக்குச் சமீபித்திருக்கின்றது. ஆதலினாலேதான் தங்கள் கருணைக்கு யான் பாத்திரனானேன். பிரஹ்மக்ஞானியான மஹானுடைய பார்வையானது கண்களுக்கு நல்ல சீதளத்தையு முகத்திற்குப் பிரசன்னத்தையு மனதிற்கானந்தத்தையும் விரைவிற் கொடுத்து மோக பாசத்தையு மறுத்து நற்கதியைக் கொடுக்கும். எவ்விருளை நீக்கும்பொருட்டு இலக்ஷங்கோடியக்கினிகள் சூரியர்கள் சந்திரர்கள் சமர்த்தர்களாகார்களோ அத்தகைய மனத்தின் அஞ்ஞானவிருளை ஆத்மக்ஞானியானவர் ஒருகால் பார்த்தமாத்திரத்திற்றானே நிவிர்த்தித்து விடுகின்றார்.

சனனமரணாதி வியாதி முதலானதாலுண்டாகின்ற அதிக துக்கங்களுள்ளதும் மனைவிமக்கள் மித்திராளென்கின்ற முதலைகளுக்கு இருப்பிடமானதும் அதனால் பயங்கரமாயுங் கோரமாயும் துக்கத்தாற் றாண்டக்கூடாததாயு மிருக்கின்ற சம்சார சாகரத்திற் கர்மங்களாகிய உயர்ந்த அலைகளின் வரிசைகளால் அடிக்கடி இழுக்கப்பட்டுப் போக்குவரத்துடன் சுழன்று பிரமிப்பதால் இதுதான் எம்மை இரக்ஷிப்பதென்று யான் ஒன்றையு மறியவில்லை சன்மாந்தரங்களிற் செய்த பெரும் புண்ணிய விசேடங்களாற் றேவரீரது பாதாரவிந்தங்களை இப்பொழுது தரிசிக்கப் பெற்றேன். ஆதலினால் தீனனான வென்னைக் கருணாதிருஷ்டியால் மிருத்யு

பயத்தினின்றும் காப்பாற்றுவீராக என்று விண்ணப் பித்தான். அவ்வாறு விண்ணப்பித்த சீடனைக் குருவானவர் கருணையோடு பார்த்து அஞ்சவேண்டா மென்று அடிக்கடி அபயங் கொடுத்தருளினார். அறிந்தோனே மிருத்யுபயத்தை விட்டுவிட்டு நித்தியனையும், அத்விதியனையும், பரமானந்த ரூபமான பிரஹ்மமாயு மிருக்கின்ற உனக்கு யாண்டு மெஞ்ஞான்றும் மிருத்யுபய மில்லவே யில்லை. நித்திரை செய்பவன் எவ்வாறு நித்திராமோகத்தால் பய வேதுவான வெதோ வொன்றைநோக்கி மனதஞ்சி என்னை இரக்ஷிக்கவேண்டுமென்று சொல்வது போல் உன்னாற் சொல்லியது பொய்யேயன்றி மெய்யன்று. நித்திராமோகத்தான் மூடப்பட்டவனல்லவோ கனவிற் சர்ப்பத்தாற் கடியுண்டவனாய்த் தன்னைப்பார்த்துப் பயத்தினால் ஐயோ இறந்துபோனேனானென்று உறக்கக் கதறுகின்றனன்; அப்பொழுது இஷடன் கையினால் அடித்தெழுப்பிக் கேட்கில் ஒன்றுமில்லையென்று கூறுகின்றனன். அவன் முன்புலம்பியது மோகத்தாலன்றியுண்டோ சொல்வாய். பழுதையைப்பார்த்து மத னுண்மையை யுணராது அரவமென்று மனதிற்கிரகித்த புருடன்ஈண்டு பாம்பிருக்கின்றதென்று அஞ்ஞானத்தா லஞ்சி நடுங்கிக் கூச்சலிடுகின்றான். அதைச் சென்று விசாரிக்கில் பாம்பானது இல்லவே இல்லை. அவ்வாறேயுன்னாலும் ஆன்மாவிற்குச்சனனமரணம்வியாதி வயோதி காதியாற் றுக்கம் உண்டாகின்றதென்று பொய்யாகவே கூறப்பட்டது. ஆதலால் எவையுமுனது பிராந்தி கற்பிதமென்று நன்றாய் விசாரித்து மனதில் பயத்தை விட்டுவிடுவாய்.

அனாத்மவர்க்கங்களின் தர்மங்களையெல்லாம் ஆத்மாவினிடத்திலாரோபித்து நீ விசனப்படுகின்றாய்;

ஆகையால் அறியாமையால் வந்த சமஸ்தகற்பிதங்களை யும் விடுத்துச் சுகியாயிருப்பாய். தயாநிதியாகிய சுவாமி யே! எல்லாம் பொய்யென்று தங்களாலே திருவாய் மலர்ந்தருளப்பட்டதே அது திருஷ்டாந்த மாத்திரத் திற் பொருந்துகின்றதேயன்றி தார்ஷ்டாந்தத்திற் பொருந்தவில்லையே; சகல ஜனங்களாலும் பிரத்தியக்ஷ மாயனுபவித்தலாற் பிரசித்தமான இப்பவ துக்கம் எவ் வாறு பொய்யாம்? பிரத்தியக்ஷமா யனுபவிக்கப்பட்ட விஷயங்கள் எவ்வாறு பொய்யாம்? நேத்திரத் திற்கு விடயமான கடத்தை எவ்வாறு யான் பொய்யெ ன்று சொல்வேன். யாவர்க்கும் பிரத்தியக்ஷமாய்ப் பிர பிரகாசித்துக்கொண் டிருக்கப்பட்ட விஷயங்களை யெவ் வாறு பொய்யென்று சொல்லலாம்? சனனமரணாதி துக்கங்களோடு கூடியவனு மற்பகாலம் ஜீவிப்பவனு மாகிய வெனக்குப் பிரஹ்மமாதலும் நித்தியமாதலும் பரம சுகஸ்வரூபமாதலு மெவ்வாறு கூடும்? ஆத்மா வென்பது யாது? அநாத்மா வென்பது யாது? இவ் விரண்டிற்கும் விலக்ஷண மென்னை? ஆத்மாவின்கண் அநாத்மாவின் றர்மங்கள் எவ்வா றாரோபிக்கப் பட் டது அஞ்ஞானமென்பது யாது? அதனால் வந்த துயர மெவ்வுபாயத்தா னீங்கும்? ஞானமென்பது யாது? அதனாலுண்டாகின்ற சுகத்தை யெவ்வா றடையலாம். இவையெல்லாங் கரதலா மலகம்போன்று நாயேற்கு விளங்கும்படியாகக் கருணாநிதியாகிய குரு சுவாமியே! தேவரீர் திருவாய் மலர்ந்தருளல் வேண்டும். குமரனே! பிராகிருதர்களான ஜனங்களினது மார்க்கத்தை விட்டுவிடு; நீயே மகத்தானவிவேகி; நல்ல புண்ணிய வானுங்கிருதகிருத்தியனும் சிவப்பிரசாதமுள்ளவனும் நீயே. ஆதலால் பிரஹ்மத்தை யறிவதற்கு நீயத்தனிக்

கின்றாய். சிவப்பிரசாத மன்றிச் சித்த சுத்தி யுண்டா காது; புத்தி யுண்டாகாது; யுக்தி யுண்டாகாது; முக் தியுமுண்டாகாது. எந்தச் சிவபெருமானது பரமப்பிர சாதத்தால் சுக வாமதேவாதி முனிவர்கள் சங்கற்பத் தைவிடுத்துச் சம்சாரபந்தத்தி னின்றும் விடுபட்டார் களோ அந்தச் சிவபெருமானதுபிரசாதமானது அனந்த ஜன்ம புண்ணியங்களா லடையத்தக்கது; அது புத்தியி னாலேயே யடையத்தக்கது; சம்சாரநிவிர்த்திக்குமேது வாக விருப்பதுமதுதான். அனேகஜன்மங்களில் அனந்த புண்ணியமியற்றி யதன்பரிபாகத்தா லீஸ்வரப் பிர சாதமுற்று அதனால் பிராணிகளுக்கு விவேகமுண்டாக வேண்டும். நீயவ்வாறு புரிந்தவனாதலாற்றான் உண் மையை யறியவேண்டுமென் றிச்சித்தாய். புருஷர் களுக்கு விவேகமுண்டானதற் கிதுதான் பலன்.

மனுஷியனாய்ச் சனித்ததற்கும் புருடனானதற் கும் பிராமணனா யிருப்பதற்கும் விவேக முண்டான தற்கு முக்கியமான பலம் மோக்ஷமென்று முதியோர் சொல்வர். மோக்ஷம் உண்டாகாமற்போமேல் முற் கூறிய வனைத்தும் பெற்றும் வீண்தான். ஆத்மாவி னுண்மையை யறிவதில் பிரவிர்த்தித்த வுனது வினாக்க ளானவை மிகவும் நன்றாகவிருக்கின்றன. ஆகையினால் காரணத்தோடு சகலத்திற்கும் சமாதானங்க ளுனக்கு நன்றாகத் தெரியும்படியாகச் சொல்லுகின்றேன்; சந் தோஷமாய்க் கேட்பாயாக. பிராந்தியினால் மனுஷ்யத் தன்மையானது உன்னிடத்திற் கற்பிக்கப்பட் டிருப்ப தாற்றான் ஜென்மாதி துக்கங்க ளெல்லா முனக்குச் சம்பவித்தது; அவை வாஸ்தவமாயில்லை. அஃதெவ்வா றெனில்; நித்திரா யோகவசத்தால் உண்டாய சுகமே னுந் துக்கமேனும் விழித்துக்கொண்ட பின்பு எப்

பொழுதாவது எதார்த்தமா யுன்னாற்கண்டதுண்டோ சொல்வாய். எல்லாஜனங்களாலும் அனுபவிக்கப்பட்டதாயும் பிரத்தியக்ஷமாயும் இருக்கு மிப்பிரபஞ்சமானது விசாரியாததால் மோகத்தை யடைந்த வுன்னால் எவ்வாறு பொய்யாமென்று சங்கிக்கப்பட்டது பொருந்தாது. கோட்டானுக்குப் பகலில் இருளானது பிரத்தியக்ஷ சித்தமாயினும் அஃதெவ்வாறு எதார்த்தமாகாதோ அவ்வாறே அஞ்ஞானிக்கு மயக்கத்தால் தோன்றும் பதார்த்தம் யதார்த்தம் போன்றிருப்பினும் புத்திமான்களுக்குப் பொய்யென்பதிலையாதையம்? நேத்திரத்தினால் பிரத்தியக்ஷமாய்க் குடமென்று பெயர் வழங்கு மோருருவந் தோன்றினும் விசாரித்து நோக்குங்கால் குடமென்பதில்லவே யில்லை. யாதுனாதெனில், அவ்விடத்தில் கடவிலக்ஷணமான மண்ணேயாம். சூரியமண்டலமானது சாஸ்திரத்தால் லக்ஷம் யோசனை விஸ்தீரணமென்று சொல்லப்படினும் நேத்திரத்திற்கு ஒரு ஓட்டையளவு உள்ளதென்று தோற்றுகின்றது. இவ்வாறு இந்திரியப் பிரத்தியக்ஷமானது சாஸ்திரத்தால் கண்டிக்கப்படுதலி னிந்திரியப் பிரமாணம் நிச்சயமற்றதேயாம். ஆதலினா லுன்னிடத்தில் மயக்கத்தாற் றோற்றும் இவ்வுலகைப்பொய்யாகவே அறிவாய்; உண்மையென்று எண்ணவே வேண்டாம்.

நீ சாக்ஷாத் சுகஸ்வரூபமான பிரஹ்ம மாகவே யிருக்கின்றாய்;உன்னைக்காட்டிலு மதை யன்னியமாகப் புத்தியி னினையாதே; விசாரித்து நோக்குங்கால் பரப்ரஹ்மமானது தானாகவே விளங்குகிறதே தவிர உலகங்களுக்குள்ளாவது பர்வதக்குகைக்குள்ளாவது சாஸ்திரங்களுக்குள்ளாவது கர்ண பரம்பரைக் குள்ளாவது இருக்கின்றதாகக் காணப்படவில்லை. மூடபுத்தியுடையவ

ஞானவன் தனக்குட்டாகுக விளங்குகிறதத்துவ சொரூ பத்தை யறியக் கூடாமல் சாஸ்திரங்களில் பிரஹ்மத் தைத் தேடுகின்றான்; இது இடையனானவன் றன் கழுத்தில் வைத்துக் கொண்டிருக்கும் ஆட்டுக்குட்டியை நினைவில்லாமல் கூபத்தின் கண் குனிந்து தேடுகின்றது போல மூடத்தன்மையேயாம். தன்சொரூபத்தை வேறு யும் பரமாத்மாவை வேறாயும் நினைத்துத் தன்னாத்மாவை மறுபடியும் பாஹியமாயிராநின்ற அன்னமயாதி கோசங் களிற் பண்டிதரைற் றேடப்படுகின்றது. வஸ்துவின் றத்துவத்தை மறந்து வஸ்துவினிடத்தில் அவஸ்து வையு மதனது தர்மங்களையு மத்தியாரோபித்து வாளா துக்கிக்கின்றான். ஆத்மா இது அநாத்மா இது என்னும் விவேகத்தை யாம்சொல்ல ஆதரவோடுங்கேட்பாயாக. அதைக் கேட்டுணர்ந்தவ னாத்ம பந்தத்தினின்றும் விடுபடுவன். இந்தப்பிரகாரம் ஸ்ரீகுருவானவர் கூறிச் சிஷியனைத் தனதபி முகப்படுத்தி யத்தியாரோப அப வாதக் கிரமமாகநிஷ்ப்ரபஞ்ச வஸ்துவை வெளியாக்கிச் சாஸ்திரத்தால் பிரதிபாதிக்கப் பட்டிருக்கின்ற மார்க் கத்தால் நன்றாகத் தத்துவத்தைத்தெரியக்கூறுகின்றார். அதன்விபரமானதுயாவர்க்குமுபகாரமா யீண்டுக்காண் பிக்கப்படுகின்றது. சர்ப்பா பாவத்தோடு கூடிய பழுதை முதலானவைகளில் சர்ப்பமென்று பிரமிப்பது போன்று வஸ்துவினிடத்தில் அவஸ்துவை ஆரோ பிப்பது அத்தியாரோபமாம். வஸ்துவென்பது சத்தி யக்ஞானாநந்த லக்ஷணத்தோடு கூடிய பரப்ரஹ்மந் தான். அதன்கண் இவ்வுலகான் தாரோபிக்கப்பட்டு ஆகாயத்தி னீலவர்ணம்போற் றோன்றுகின்றது.

யாதொரு ஞானத்தால் எவ்வஞ்ஞானநாசங்காணப் படுகின்றதோ உலகாதி காரியத்தோடு கூடியதுமசத்து

மாயிருக்கின்ற அவ்வஞ்ஞானத்தை அவஸ்துவென்று சாதுக்கள் சாற்றுவார்கள். பிரமாணங்களாலெது பாதிக்கப் படுகின்றதோ அதுதானவஸ்துவென்னப் படும். இப்பியைப்போல முக்காலத்தினு மியாது பாதிக் கப் படாதோ வதுவே வஸ்துவெனப்படும். விசாரித் தால்ரஜதத் திற்குப்பாதம் எவ்வாறுளதாமோ அவ்வாறு இப்பிக்குப் பாத முண்டாகாது. ஜகத் தோற்றத்திற் குக் காரணமாயும் முக்குண வுருவமாயும் சத்தசத் தென்று சாற்றத் தகாததாயு மிருக்கு மஞ்ஞானமே அவஸ்து வென்னும் பெயரையுடையதாம். அதனது இருப்பு வஸ்துவின் உண்மையை யறியுங்கால மவ் வளவுதான்; அறிந்தால் பாதிக்கப்படும். அந்த அஞ் ஞானமானது பரப்ரஹ்மத்தினிடத்தில் கற்பித சம்பந் தத்தாலாசிரயித்திருக்கின்றது. இரத்தினத்திற் பிரகாச சக்தியிருப்பினு மபின்னமா யிருப்பதால் எவ்வாறு ஆசிரயத்திற்குத் தூஷகமாக வில்லையோ அவ்வாறே அபின்னமா யிருக்கின்றது. அந்த அஞ்ஞான முண் டென்பதிற் பிரமாண மியாதெனில் இச்சராசரமா யுள்ள சகத்துண்டா யிருப்பதுஞ் சுருதிஸ்மிருதிகள் சொல்லுவதும் நானறியாதவ னென்ற வநுபவமும் பிர மாணங்களாம். அந்த அஞ்ஞானமே பிரகிருதி, சக்தி, அவித்தை யென்று சொல்லப்படுகின்றது. அதுசத்து மாகாது அசத்துமாகாது. சுத்திரஜதம்போன்று அநிர் வசனீயமாம். இந்த அஞ்ஞானம் பிரஹ்மத்தினின்றும் பின்னமுமன்று அபின்னமுமன்று. எவ்வாறு தீபத்திற் குக் காந்தியோ அவ்வாறு போலேயும் பீஜத்திலிருக்கு மங்குரம் போலேயும் சாவயவமுமல்ல நிரவயவமு மல்ல. ஆகையினு லநிர்வசனீய மென்றே வித்வான்கள்

சொல்லுகின்றார்கள். சமஷ்டி வியஷ்டி யென்று அஞ்ஞான மிருவிதம்; நாநாவிதமான மரங்க ளொன்று சேர்ந்து தோப்பென்ற லெப்படியோ அப்படியே நாநாவிதமான அஞ்ஞானங் ளொன்று சேர்ந்ததைச் சமஷ்டியஞ்ஞானமென்று சொல்லப்படும்.

இந்தச் சமஷ்டியஞ்ஞானமானது சுத்த சத்துவரூபிணியாய்ச் சத்துவாம்ச மதிகரித்திருப்ப தான் மாயையென்று சொல்லப்படும். மாயையோடு கூடிய சைதன்னியம் சாபாஸமென்றும் சத்துவகுண பூரிதமென்றும் சர்வஞ்ஞத்வாதி கல்யாண குணங்களோடு கூடியதென்றும் சிருட்டி திதி சங்காரங்களுக்குக் காரணமென்று மவ்வியாகிருதமென்று மவ்வியக்தமென்று மீசுர னென்றுஞ் சொல்லப்படும். அவ்வீஸ்வரனானவன் சமஸ்த சக்திகளோடு கூடியவனும் சமஸ்த ஞானத்தையும் விளக்கி வைக்கின்றவனும் சர்வ தந்திரனும் சத்திய சங்கற்பஈசனுஞ் சத்தியகாமனும் இருக்கின்றான். அந்த ஈஸ்வரனுடைய மகா சக்தியானது சர்வஞ்ஞத்வ ஈசுரத்வாதிகட்குக் காரணமாகையால் சமஷ்டியாயும் சாத்விகமாயு மிருக்கின்ற காரண சரீரமென்று சொல்லப்படும். இந்தமாயையானது ஈசுவரனுக்கு மிகவும் ஆனந்தம் பொருந்தச்செய்து கத்தியையுறை மறைத்தாற்போன்று ஈசுவரனை மறைப்பதால் இந்தமாயை யீசுவரனுக்கு ஆனந்தமயகோசமென்று சொல்லப்படும். எவ்விடத்தி லடிக்கடி பிராகிருதப் பிரளயமென்று வேதங்கள் சொல்லுகின்றனவோ அவ்வாறுசமஸ்தமும் ஒடுங்குகிறதற்கேதுவாகியிருப்பதால் சுழுத்திஸ்தானமென்று அதைச் சொல்லப்படும். வியஷ்டி அஞ்ஞானமானது அனேக பேதமாயிருப்பதால் அவ்வஞ்ஞானவிருத்திகளும் அதனது குணங்களும்

அனேகவிதமாயிருக்கின்றன. எவ்வாறு வனமானது பிரிக்குங்கால் அனேகவித விருக்ஷங்களாகக் கூறப்படுகின்றனவோ அவ்வாறு அஞ்ஞானமானது பிரிக்குங்கால் அனேக விதமாய்ச் சொல்லப்படும். குணங்களுடன் வியாபித்துச் சமஷ்டியாயும் வியஷ்டியாயுமிருப்பதால் சமஷ்டியென்றும் வியஷ்டியென்றும்சொல்லப்படும். பிரத்தியகாத்மாவிற்கு உபாதியாகப்பட்ட இவ்வியட்டியஞ்ஞானமானது ரஜசினாலும் தமசினாலும் மலினமாய சத்துவத்தைபுடைத்தாயிருப்பதால் கீழானதென்று சொல்லப்படுகிறது.

வியஷ்டியஞ்ஞானோபஹிதசைதன்யத்திற்குப் பிரத்தியகாத்மாவென்றும் வியஷ்டியின் ரூதாத்மியத்தால் அந்தந்தக் குணங்களான் மூடப்பட்ட விசிஷ்டசைதன்யத்திற்குச் சீவனென்றுஞ் சொல்லப்படும். அந்தச் சீவன் கிஞ்சிக்ஞனென்றும் அனீஸ்வரனென்றும் சம்சாரியென்றுஞ் சொல்லப்படுவன். இந்த வியஷ்டியானது இச்சீவனுக்கு அகங்காரத்திற்குக் காரணமாயிருப்பதால் காரண சரீரமென்றும் இதிலபிமானித்த சீவனுக்குப் பிராக்ஞனென்றும் பெயர். இப்பெயருள்ள சீவன் வியஷ்டியான அஞ்ஞானத்தைமட்டும் விளக்குவதால் பிராக்ஞனென்கின்ற பெயராம். இப் பிராக்ஞன் கீழான வியஷ்டியில் சம்பந்தப்பட்டவனாகையால் சமஷ்டியஞ்ஞானத்தை விளக்க அசமர்த்தனாவன்; சொரூபத்தை மறைப்பதாலும் அதிக ஆனந்தமுள்ளதாலும் காரணசரீரம் ஆனந்தமயகோசமென்று சொல்லப்படும்.

இப் பிராக்ஞனென்பவனுக்கு அவஸ்தை சுழுத்தியாம். அதில் ஆனந்தம் மிகவுமிருக்கிறது. நான்சுகமாய்த்

தூங்கினேன்; நான் ஒன்று மறியேன் என்று அதிக ஆனந்தானுபவமானது தூங்கி யெழுந்தவனிடத்திற் காணப்படுகின்றது. உண்மையாய்த் தன்மை யொன்று யிருத்தலால் சமஷ்டி வியஷ்டியாகிய விந்த இரண்டிற் கும் வனத்திற்கும் விருக்ஷத்திற்கும்போன்று அபேத முளதென்றே யறி. அவ்வாறே ஈசனுக்கும் பிராக்ஞ னுக்கும் அபேதமே யென்றறியவேண்டும். உபாதிகள் அபேதமாயிருக்க அதிலுள்ள சைதன்யங்கள் எவ்வாறு பேதமாம்? அலைமுதலியன ஒன்றாயின் அதில்பிரதிவிம் பித்த சூரியன் அனேகம் எவ்வாறு ஆவன்? அஞ்ஞா னங்களு மவற்றுடன் கூடிய ஆபாசங்களும் ஆகிய இவை களுக்கு ஆதாரமாயிருக்கின்ற யாதொரு சுத்த சைத ன்யமுண்டோ அது துரியமென்று சொல்லப்படும். அதுவே அவ்வவ்வுபாதிகளால் அவ்வக்குணங்களோடு கூடியிருக்குங்கால் மாகாவாக்கியத்திற்கு வாச்சியார்த்த மாகும்; கூடாத அதுவே லக்ஷியார்த்தமாகும். அனந்த சக்திகளோடு கூடியிருக்கிற மாயையை யுபாதியா யுடைய ஈஸ்வரன் இச்சராசரப் பிரபஞ்சத்தை சங் கற்பமாத்திரத்தாற் சிருஷ்டிக்கின்றார். அத்விதீயராயுங் கேவலராயுமிருக்கின்ற ஈஸ்வரன் உபாதான சாதன மின்றி எவ்வாறு சுயம் ஒருவராகவே சமஸ்தத்தை யும் சிருஷ்டிக்கின்றாரென்று சங்கிக்கவேண்டாம். பிரபு வாயிருக்கின்ற ஈஸ்வரன் தானே நிமித்த காரணமாயும் உபாதான காரணமாயு மிருந்துகொண்டு சராசர ரூப மான சகத்தை சிருஷ்டி திதி சங்காரம் செய்கின்றார். எவ்வாறெனில்; சித் பிரதானத்தால் நிமித்தகாரணமா யும் சடப்பிரதானத்தால் உபாதான காரணமாயும் ஆகி ன்றார். எவ்வாறு உலண்டுப் பூச்சியானது புத்திப்பிரதா னத்தால்நிமித்தமாயும்சரீரப்பிரதானத்தால்உபாதான

மாயும் ஆகின்றதோ அவ்வாறே யீஸ்வரன் தமோ குணமாயையில் உபாதானராயும் சத்துவ குண மாயையில் நிமித்தராயும் ஆகின்றார். தமப்பிரதானப் பிரகிருதியுடன் சேர்ந்த பரமாத்மாவினிடத்தி லிருந்து ஆகாயமும் ஆகாயத்திலிருந்துவாயுவும் வாயுவிலிருந்து தேயுவும் தேயுவிலிருந்து அப்புவும் அப்புவிலிருந்து பிருதிவியும் கிரமமாயுண்டாயின. பிரகிருதி தமப்பிர தானமென்பது அந்தப் பிரகிருதி காரியமான சூட்சும பூதங்கள் ஜடமா யிருப்பதால் அறியப்படும். காரிய குணங்களை உண்டுசெய்வது காரண குணங்கள்தான். அக்காரியங்கள் சூக்ஷ்ம பூதங்களென்றும் தன் மாத் திரைகளென்றும் சொல்லப்படுகின்றன.

இந்த சூட்சும பூதங்களினுடைய சத்துவ ரஜோ குணங்களினின்று சூக்ஷ்மசரீரங்களும் தமோகுண த்தினின்று பஞ்சீகிருத ஸ்தூலபூதங்களு முண்டா யின. சூட்சும பூதங்களினின்று 17 தத்துவங்க ளுள்ளதாயும் ஆத்மாவிற்குப் போகசாதனமாயும் சம் சார காரணமாயும் இருக்கின்ற இலிங்க சரீரமுண்டா யிற்று. சுரோத்திரம் துவக்கு சட்சு சிங்குவை க்ரா ணம் என்னும் ஞானேந்திரியங்க ளைந்தும், வாக்கு பாணி பாதம் பாயுரு உபஸ்தம் என்னும் கருமேந்திரி யங்களைந்தும்,பிராணாபானவ்யானோதான சமானனென் னும் பிராணாதி யைந்தும்,மனம் புந்தி இரண்டும் ஆகப் பதினேழுஞ் சேர்ந்து இலிங்க சரீரமென்று சொல்லப் படும். ஆகாசாதிகளின் சத்வாம்சத்தினின்று சுரோத் திர முதலான ஞானேந் திரியங்களைந்தும் கிரமமாய் உண்டாயின. ஆகாசாதிகளின் சத்துவாம்சங்களைந்தும் ஒன்று சேர்ந்து சர்வகாரணமான அந்தக் கரணமுண் டாயிற்று.

நிர்மல சத்வகுண மானதினாற் பிரகாசமாயிருக்கின்றது. சருவத்தையும் பிரகாசிப்பதினால் அந்தக்கரணம் சாத்விகமாயிற்றென்று சொல்லப்படும். அவ்வந்தக்கரணம் விருத்திபேதத்தால் மனது புத்தி அகங்காரம் சித்த மென்று நான்குவிதமாம். சங்கற்பிக்கின்றது மனது, நிச்சயிக்கின்றது புத்தி, அபிமானிக்கின்றது அகங்காரம், விஷயத்தைச் சிந்திக்கின்றது சித்தம்; இலிங்க சரீரத்திற்குப் பதினேழு அங்கமென்று சொன்னது சித்திக்கும்பொருட்டு மனதில் சித்தத்திற்கும் புத்தியில் அகங்காரத்திற்கும் ஐக்கியத்தை அறியவேண்டும். மனதிற்குச் சங்கற்பமுதலியன எப்படியோ அப்படியே சிந்தனம் உண்டாதலால் சித்தத்திற்கு மனதிலந்தர்ப்பாவம் சித்திக்கின்றது. சரீரமுதலியவற்றில் யானென்று உறுதியானபாவனைபுத்திக்கு உண்டாகின்றபடியால் அகங்காரத்திற்குப் புத்தியில் அந்தர்ப்பாவம் சொல்லப்பட்டது. அதனாற்றான் புத்தியினது கர்த்ருத்வமும் மனதினது கரணத்வமும் ஆகிய இரண்டு மோகங்களா லாத்மாவிற்குச் சனனமரண முண்டாகின்றதென் றறியத்தக்கதாம்.

புத்தியும் ஞானேந்திரியங்களுங்கூடி விஞ்ஞானமய கோச மெனப்படும். விஷயஞான மிகுதியாலும் ஆத்மாவை மறைக்கிறபடியாலும் விஞ்ஞானமய கோசமென்று சொல்லப்படும். இவ்விஞ்ஞான மயன்றான் மகானாயும் அகங்கார விருத்தியுள்ளவனாயும் கருத்தாவாயும் சம்சாரத்தை வஹிக்கின்றவனாயும் இருக்கின்றான். சிவனென்னும் பெயருள்ள இந்தப் புருஷன்றான் தேகம் இந்திரியம் வீடுமுதலானவற்றில் யானெனதென்று அபிமானத்தை எப்பொழுது மடைகின்றான்; கர்த்தாபோக்தா சுகதுக்கமுள்ளவன் என அவனே

ஆகின்றான். தனதுவாசனையால் ஏவப்பட்டவனும்புண்ணிய பாபரூபமான இரண்டுவிதகருமங்களையும் இயற்றி அதனாலுண்டாகின்ற சுகதுக்க மெல்லாம் இகத்திலும் பரத்திலும்அனுபவிக்கின்றவன் இச்சீவனே. இச்சீவன் அனேகயோனிகளி லடிக்கடிபிறந்திறந்து சம்சார மண்டலத்தில் சுழலுகின்றனன்.

ஞானேந்திரியங்களுடன் கூடிய மனதுதான் மனோமய கோச மென்பது; மனதிற்கு முக்கியத்வம் அவ்விடத்தி லிருப்பதால் அது மனோமய கோசமாயிற்று. இம்மனோ மயத்திற்கு விருத்திகள் சிந்தை சோகஞ் சந்தோஷம் முதலியனவுங் காம முதலாயினவுந் தான். இச்சீவன் மனதினாற்றான் பயனையிச்சிப்பதும் எத்தனிப்பதும் செய்வதும் போகிப்பதும் ஆதலால் எவைக்கும் மனதுதான் காரணம். இச்சீவனுக்கு மனதுதான் வணக்கத்திற்குக் காரணம்; இம்மனதினாற்றான் பாகியத்திலும் ஆந்தரத்திலும் விஷயங்களை யறிகிறான்; கேட்டல் முகர்தல் காணல் சொல்லல் தொடல் புசித்தல் முதலிய யாவையும் செய்கின்றான். புருஷர்களுக்குப் பந்த மோக்ஷங்களும் அர்த்தானர்த்தங்களும் மனதினால் உண்டாகின்றன. மனது சுத்தமானால் மோக்ஷமும், மலினமானால் பந்தமும், விவேகத்தா லர்த்தமும், அவிவேகத்தா லனர்த்தமும் உண்டாகின்றன. ரஜசு தமசுகளினாலே மலினமாயும் அசுத்தமாயும் அஞ்ஞானத்தா லுண்டானதாயும் சத்துவகுண மில்லாததாயு மிருக்கின்ற மனமானது ஆவரண தோஷத்தோடுகூடியிருப்பதால் ஜடபாவம், மோகம், ஆலஸ்யம், பிரமாத:மென்னு மிவைகளாற் கெடுக்கப்பட்டு அடையத்தக்கதா யிருக்கின்ற வாஸ்தவமாயுள்ள ஆத்மாவை அறியவில்லை. தீபமெப்படிப் பெருங்காற்றால்

அலைக்கப்படுமோ அப்படி மனதானது ரஜோகுணத்தினது தோஷங்களோடு கூடியதாய் விக்ஷேபத்தை யியற்றும்.

விரோதிகளாகிய காமாதிகளால் கெடுக்கப் பட்டுத் துயரத்தை யியற்றுவதுடன் பிரயாசத்தா லறிந்த சூட்சுமார்த்தத்தையும் மறக்கவுஞ் செய்யும். ஆகையினால் முமுட்சுவானவன் சம்சார பந்த நிவர்த்தியின் பொருட்டுத் தன்மனதை ரஜஸ் தமோ குணங்களுடன் கூட்டாமல் சுத்தசத்துவ குணத்தோடு கூடுமாறு எப்பொழுதும் பிரயத்தினம் செய்ய வேண்டும். மாதாவின் கர்ப்பத்திலும் சனிப்பதிலும் மரிப்பதிலும் சரையிலும் வியாதி யாதிகளிலும் நரகாதிகளிலும் பிராணிகளுக்கு யாதுயாது துக்கங்க ளுண்டாகின்றனவோ அவைதயவை யடிக்கடி சிந்தித்துப்பார்த்துச் சமஸ்த விஷயங்களிலும் ஆசையை விடுத்து இருதயக் கிரந்தியை விடுப்பதற்காகப் புத்திமானானவன் சத்துவ குணத்தை யவலம்பிக்கின்றனன். யாவன் இயமநியமங்களிற் பிரயத்ன முடையனாய் ஆசக்தியுள்ளவனா யிருக்கிறானோ அந்த விவேகியின் சித்தமே தெளியும். யாவன் அசுர சம்பத்தை விடுத்துத் தேவ சம்பத்தையே மோக்ஷ இச்சையா னித்தம் பஜிக்கின்றானோ அவனது சித்தமேதெளியும். யாவன் மனதானது பர திரவியத்தையும் பர துரோகத்தையும் பர நிந்தையையும் பர ஸ்திரீகளையும் இச்சிக்கின்றதின்றோ அவன் சித்தமே தெளியும். யாவன் தன்னிடத்திற் போன்று சமஸ்த ஜனங்களிடத்திலும் விவேகத்தால் சுகதுக்கங்களைச் சமமாய்ப் பார்க்கின்றானோ அவன் சித்தமே தெளியும். யாவன் சிரத்தாபக்திக ளோடுங் குருவை

யும் ஈஸ்வரனையும் எப்பொழுதும் பஜிக்கின்றானோ அவன் சித்தமே தெளியும்.

நிஷ்டானுஷ்டானத்தையும் ஈஸ்வர பூஜையையும் குரு சேவையையும் தீர்த்த யாத்திரையையும் ஆஸ்ரமதர்மாசரணத்தையும் இயம நியமாதிகளையும் சித்தந் தெளிதற்குக் காரணமாகப் பெரியவர்கள் சொல்லுகிறார்கள். துவர்ப்பு புளிப்பு உப்பு அதி உஷ்ணம் காரம் எரிப்பு கசப்பு துர்க்கந்தம் பழையது முதலிய இவ்வாகாரங்களைத் தியாகஞ்செய்வது சத்துவகுணம் உண்டாதற்குக் காரணம். சாத்விக புராணங்களைச் சிரவணம் பண்ணுவதாலும் சத்வ பதார்த்தத்தைச் சேவிப்பதாலும் பெரியோர்களைப் பேணுதலாலும் சத்துவ விருத்தி யுண்டாகும். (சத்துவ பதார்த்தத்தைச் சேவிப்பதாலும் என்றது = சத்துவ பதார்த்தங்களைப் போகிப்பதும் சத்துவ தேவதைகளை ஆராதித்தலும் என்றுணர்க).

யாவன் சித்தம் விஷயவாசனை யின்றியும் நிர்மலமாயு மிருக்கின்றதோ அவன் சகல பிராணிகளுக்கும் சுகஞ்செய்பவனே. அவனுக்கு மோக்ஷங் கையிலிருப்பதே. இதமாயும் மிதமாயும் புசிக்கின்றவனும் ஏகாந்தத்தில் வசிக்கின்றவனும் சபைக் குசிதமாயும் இதமாயும் பொருந்துமாறு அறிந்தே வசனிப்பவனையும் சமநித்திரையும் ஆகாரமும் செய்பவனையும் ஜிதேந்திரியனையும் யாவன் விதிப்படி ஆத்மாவை பஜிக்கின்றானோ அவனது சித்தந் தெளிவை யடையும். சித்தந் தெளியாது பரமார்த்த தத்துவத்தை யடைதல் கூடாது. தத்துவத்தை யடையாமல் முக்தியானது பிரமனது கற்ப கோடி காலத்திற் கூடச் சித்தியாது. மனதின் தெளிவின்மையே புருடனுக்குப் பந்தம்; மனதின்

தெளிவே சம்சாரபந்த நிவர்த்தி. ஆதலால் மனத் தெளிவை யடைவதற்காக மனோநிரோதத்தை வித்துவான் செய்யவேண்டும்.

பஞ்சபூதங்களின் இராஜதாம்சங்களினின்றும் கிரமமாய் வாக்கு பாணி பாதம் பாயுரு உபத்தம் என ஐந்து கருமேந்திரியங்கள் உண்டாயின. ஆகாச முதலாகிய பஞ்சபூதங்களினுடைய இராஜதாம்சங்களின் சமஷ்டியினின்றும் கிரியா ஸ்வரூபங்களான பிராணாதி ஐந்து வாயுக்களும் உண்டாயின; முகத்தினும் நாசியிலும் செல்வதால் பிராணனென்றும், கீழ்நோக்கிச்செல்வதாலபானனென்றும், நான்கு பக்கங்களிலும் வியாபித்தலால் வியானனென்றும், உத்கிரமணம் செய்வதால் உதானனென்றும், உட்கொண்ட அன்ன பானாதிகளைச் சமப் படுத்துவதாற் சமானனென்றும் பெயர்களுண்டாயின.

இவ்வாறு பிராணாதி வாயுக்களிடத்திலுங் கருமேந்திரியங்களிடத்திலும் மிகுதியாய்க் கிரியையே காணப்படுவதால் அவைகள் இராஜதாம்சங்களினின்றும் ஜனித்தவைகளென்று மகான்கள் அங்கீகரித்திருக்கின்றார்கள். கிரியாசக்தியை ராஜசியென்றும்ஜடசக்தியைத் தாமசி யென்றும் பிரகாச சக்தியைச் சாத்விகியென்றும் மகரிஷிகள் வழங்குகின்றனர்.

இந்தப் பிராணன் முதலான ஐந்து வாயுக்களும் ஐந்து கர்மேந்திரியங்களும் சேர்ந்து பிராணமயகோசமாகும். அந்தப் பிராணமய கோசத்தாற்றான் றாலமான அன்னமய கோசஞ் சேஷ்டிக்கும். புண்ணிய பாபமாய் எவ்வெக் கருமங்கள் வாக்குமுதலாகிய கருமேந்திரியங்களாலும் சரீரத்தாலும் சம்பாதிக்கப்

படுகின்றனவோ அவைகளெல்லாம் பிராணமய கோசத்தின் தருமந்தான். எவ்வாறு வாயுவால் மிகவும் அலைக்கப்பட்ட விருக்ஷமானது நானாவிதமாய் அலைகின்றதோ அந்தவாயு நிச்சலமாயிருக்கும்போது அவ்விருக்ஷமும் எவ்வாறு அலையாமலிருக்கின்றதோ அவ்வாறே பிராணன்கள் கருமேந்திரியங்கள் ஆகிய இவைகளாலேவப்பட்டு இத்தேகமானது யுக்தாயுக்த சகல கருமங்களிலும் பிரவர்த்திக்கிறது. இந்தப்பிராணமயம் மனோமயம் விஞ்ஞானமயம் என்னுங் கோசத்திரயமும் சேர்ந்து ஆத்மாவிற்குச் சூட்சும சரீரமென்று சொல்லப்படுகிறது. அதிசூக்ஷமமாய் மறைந்து கொண்டிருக்கிற ஆத்மாவைத் தெரியப்படுத்துவதால் இலிங்கமென்றும் ஸ்தூலத்தை யபேக்ஷித்துச் சூக்ஷமமென்றும் சொல்லப்படும். எவ்வாறு மரங்களுடைய கூட்டமானது வனமென்று சொல்லப்படுகின்றதோ அவ்வாறு இலிங்கசரீரமெல்லாங் கூடி ஒரு புத்திக்கு விஷயமாயிருப்பதால் சமஷ்டியென்று சொல்லப்படுகிறது. இந்தச் சமஷ்டியுடன் சேர்ந்ததாயும் பிரயோசனத்துடன் கூடினதாயும் இருக்கின்ற சைதன்யமே இரணியகர்ப்பன் சூத்திராத்மா மகாப்பிராணன் என்று சொல்லப்படுகின்றதென்று தெரிந்தவர்கள் சொல்லுகிறார்கள். ஜோதி ஸ்வரூபமான புத்தியில் சுவர்ணம்போற் பிரகாசிப்பதினால் இரணிய கருப்பனென்றும் மணிகளின் வரியிற் கயறுபோற் சமஸ்த லிங்க சரீரங்களிலும் வியாபித் திருப்பதால் சூத்திராத்மா வென்றும் சேஷ்டிப்பதால் மகாப் பிராணனென்றும் சொல்லப்படும். தனித்தனியே அனேகபுத்திக்கு விஷயமா யிருப்பதால் இலிங்க சரீரம் வியஷ்டியாகும். இந்தவியட்டியுடன் சேர்ந்து தைஜசனாயிருக்

கின்ற சைதன்யம் தைசதனென்று புத்திமான்கள் சொல்லுகின்றார்கள். தேஜோமயமான அந்தக் கரணத்தை உபாதியாயுள்ளவனுகையாற்றைசதனென்று பெயர்; ஸ்தூலத்தைக் காட்டிலும் இதுசூட்சுமமாகையால் சூட்சுமசரீரமாகும். இச்சூக்ஷ்மம் சாக்கிர சமஸ்காரமயமாகையால் சரீரமென்னப்படும். கனவில் நனவின் வாதனையால் உண்டாக்கப்பட்டிருக்கும் சூட்சும வஸ்துக்களான விஷயங்களைச் சூட்சும விருத்திகளால் தைசதன் அனுபவிக்கின்றனன். ஒருஜாதியாதலாற் பேதமின்மையின் சமஷ்டிக்கும் வியஷ்டிக்கும் முன்போல் அபேதமே அறியத்தக்கது. இரண்டுபாதிகளும் ஏகமாகையால் அவ் வுபாதிகளுக் கபிமானிகளான சூத்திராத்மா தைசதன் இவர்களுக்கும் முன்போல் அபேதமே கொள்ளத் தக்கதாம். இவ்வாறு சூட்சுமப் பிரபஞ்சத்தின் பிரகாரம் சாஸ்திர சம்மதமாம்.

தூலப் பிரபஞ்சத்தின் பிரகாரத்தைச் சொல்லுகின்றேன் கேட்பாயாக:—முற்கூறிய சூட்சுமபூதங்கள் பஞ்சீகரணம் செய்யப்பட்டு ஸ்தூலங்களாக ஆகின்றன. ஆதலால் பஞ்சீகரணக் கிரமத்தைக் கேட்பாயாக. ஆகாசாதி ஐந்து பூதங்களையும் பிரத்தியேகம் பிரத்தியேகம் இரண்டாய்ப் பிரித்து முதற்பாகத்தை விடுத்து இரண்டாவது பாகத்தை நான்கு நான்காய்ப் பிரித்து அந்த அரைக்காலரைக்காற்பங்கை மற்றநான்கு பூதங்களுடைய முதற்பாதியோடு கிரமமாய்த் தங்கள் பாதியைவிடுத்துச்சேர்க்க ஆகாசாதிபூதங்களுக்கு ஐவைந்து பாகங்களாகின்றன. தன்தன் பாதிபாகத்தோடு மற்றநாலு பூதங்களாற் கிடைக்கப் பட்ட நான்கு பாகங்களையுஞ் சேர்த்து ஆகாசமுதலிய பூதங்கள் கிரம

மாய்த் தூலங்களாகின்றன. இப் பஞ்சீகரணம் பிரமாணமோ அன்றோ வெனச் சந்தேகிக்கக் கூடாது. சாந்தோக்கிய உபநிடதத்தில் தேஜஸை முதற்சிருட்டித்து அதினாற் சலமும் அதினாற் பிருதிவியும் உண்டாய், அந்தமூன்று பூதங்களால் சகத் துண்டானதாய்த் திரிவித்கரணஞ் சொல்லப்பட் டிருக்கின்றதே யென்றால் அது இதற்கும் உபலக்ஷண மென்றேயறி. ஏனெனில் ஆகாசமும் வாயுவும்சேர்ந்து ஐந்துபூதங்கள் உண்டானதாய்த் தைத்திரிய உபநிஷத்திற் கூறப்பட்டிருக்கிறது. இன்னும் தேஜஸ் முதலான பூதங்களி லும் வாயுஆகாசத்தி னுடைய குணங்கள் தெரிகின்றதல்லவா? ஆனதினால் பஞ்சீகரணம் பிரமாணந்தானென்று சாதுக்கள் தெரிந்துக் கொள்ளத் தக்கது. அவ்வாறு தெரிந்து கொள்ளா விடின், பிரத்தியக்ஷாதிப் பிரமாணங்கட்கு விரோதமாம். அஃதெவ்வாறெனில் ஆகாச வாயுக்களுடைய சப்த ஸ்பரிசதர்மங்கள் அக்கினிமுதலான மற்றமூன்று பூதங்களில் எவ்வாறு தெரிகின்றதோ அவ்வாறு அக்கினி முதலான பூதங்களின் றருமங்கள் ஆகாச வாயுக்களிற் காணக் கூடவில்லை. அதனாற் பஞ்சீகரணம் அப் பிரமாணமென்று சங்கிக்கக்கூடாது. ஆகாசந்தன்னுலும் தனதம்சத்தாலும் அக்கினிமுதலானவற்றை வியாபித் திருக்கின்றது. அவ்வாறு காரணமாய் ஆகாசவியாப்தி அதிகமாயிருப்பதால் அக்கினி முதலானவற்றில் ஆகாசகுணமான சப்தம் அறியப் படுகின்றது. வாயுவின் குணமான சலனமும் அக்கினி முதலியவற்றில் அறியப்படுகிறது. அவ்வாறு அக்கினி முதலியவைக்கு ஆகாச வாயுக்களில் வியாப்தி சொல்லக் கூடாது. அம்சத்தின் வியாப்தி அதிசூக்ஷம மாதலால் அதின் றருமம்

அறியலாகாது; காரணரூ ரூபமாய்க் காரியம் யாண்டும் காணப்படுதலின். ஆதலால், சாதுக்கள் பஞ்சீகரணம் எதார்த்தமென்று ஒப்புக்கொள்ளத் தக்கதேயாம். ஆதலால் ஸ்பஷ்டமான தத்தங் குணத்துடன் பஞ்ச பூதங்களையுஞ் சொல்லுகின்றேன். அதை நீ தெரிந்துகொண்டு நன்றாய் நிச்சயஞ் செய்துகொள்வாயாக.

ஆகாயத்திற்குச் சத்தகுணம் ஒன்றே; வாயுவிற்குச் சத்தம் பரிசம் என்னுமிரண்டு குணங்கள்; அக்கினிக்குச் சத்தம் பரிசம் ரூபம் என்னும் மூன்று குணங்கள்; அப்புவிற்குச் சத்தம் பரிசம் ரூபம் ரசம் எனக் குணங்கள் நான்கு; பிருதிவிக்கு சத்தம் பரிசம் ரூபம் ரசம் கந்தம் எனக் குணங்கள் ஐந்து.

சுரோத்திரேந்திரியமானது ஆகாசத்தினம்சமாதலால் அதன் குணமான சத்தத்தை யறியும்; துவக்கிந்திரியம் வாயுவின் அம்சமாதலால் அதன்குண மான ஸ்பர்சத்தை யறியும்; சட்சு இந்திரியமானது தேஜசின் அம்சமானதால் அதின் குணமான உருவத்தைக் கிரகிக்கும்; சிங்குவேந்திரியம் அப்புவி னம்ச மாதலால் அதின் குணமான ரசத்தைக் கிரகிக்கும்; கிராணேந்திரியம் பிருதிவியி னம்சமானதால் அதின் குணமான கந்தத்தைக் கிரகிக்கும்.

வாக்கிந்திரியமானது ஆகாச அம்சமாதலால் சப்தோச்சாரணக் கிரியையைச் செய்கின்றது; பாதங்கள் வாயுவி னம்சமானதால் போதல் வருதலாகிய கிரியைகளைச் செய்கின்றன; கைகள் தேஜோம்சமாதலால் அக்கினி முதலான தெய்வங்களை அர்ச்சிக்கின்றன; உபஸ்தமானது அப்புவி னம்சமாகையால் வீர்யத்தை

யும் மூத்திரத்தையும் விசர்ஜனம் செய்கின்றது; பாயுரு பூமி அம்சமாகையால் கடினமான மலத்தை வெளிப் படுத்துகின்றது.

ஸ்ரோத்திரேந் திரியத்திற்குத் திக்கு தேவதை; துவக் கிந்திரியத்திற்கு வாயு தேவதை; சட்சு இந்திரி யத்திற்குச் சூரியன் தேவதை; சிங்கு வேந்திரியத் திற்கு வருணான் தேவதை; ஆக்கிராணேந்திரியத்திற்கு அஸ்வனி தேவதைகள் இருவருந் தேவதைகள். வாக் கிற்கு அக்கினியும், பாணிக்கு இந்திரனும், பாதத்திற் குத் திரிவிக்ரமரும், பாயுருவிற்கு மிருத்யுவும், உபஸ்தத் திற்குப் பிரஜாபதியும் தெய்வங்கள். மனதிற்குச் சந்திர னும், புத்திக்குப் பிரகஸ்பதியும், அகங்காரத்திற்கு உருத்திரரும், சித்தத்திற்கு க்ஷேத்ரக்ஞரும் தெய்வங் களாம்.

ஆகாசாதிகளுடைய சத்துவாம் சத்தில் உண்டா யிருக்கின்ற திக்காதி தேவதைகள் இந்திரிய ஸ்தானங் களிற் பொருந்திக் கர்மானு சாரமாய்ப் பிராணிக ளுடைய இந்திரியங்களை நிக்கிரகானுக்கிரகம் செய்கின் றார்கள். சரீரம் கரணங்கள் பிராணன் அகங்காரம் தெய் வங்கள் ஆகிய இவ்வைந்தும் சமஸ்த கர்மப் பிரவிர்த்திக் குக் காரணங்கள். கர்மானு ரூபமாய்க் குணங்க ளுண் டாகின்றன; குணானு ரூபமாய் மனது பிரவிர்த்திக்கின் கின்றது; மனதின்படியே பாகியேந்திரியங்கள் புண் ணிய பாவங்களைச் செய்கின்றன. விஞ்ஞான மயனானவன் அகங்காரரூபமா யிருந்துகொண்டு நான் கர்த்தா வென்று அபிமானிக்கின்றனன். ஆத்மா சாக்ஷியாய் (ஒரு காரியத்தையும் செய்வதுமில்லை செய்விப்பது மில்லை) தடஸ்தமா யிருக்கின்றார். அகங்காரியானவன்

திருஷ்டாவாயும் சுரோதாவாயும் வக்தாவாயும் கர்த்தாவாயும் போக்தாவாயு மிருக்கின்றனன்.

ஆத்மா அந்த அகங்கார விகாரங்களுக்குச் சாக்ஷியாய் சம்பந்தப்படாதவராய் இருக்கிறார். உலகின் கண் பிராணிகளாற் செய்யப்படும் கர்மங்களில் ஆத்மா சூரியன்போன்று சாட்சி மாத்திரமேயன்றி கர்த்தாவும் போக்தாவுமல்லர் சூரியன் கருமத்தைச்செய்யவுமில்லை செய்விப்பதுமில்லை. அவர் சந்நிதியிற் பிராணிகள் தங்கள் சுபாவத்தின்படியே கருமத்தைச்செய்கின்றார்கள். அவ்வாறு சூரியன்போல் நிஷ்கிரியனான ஆத்மா தேகேந்திரியாதிகள் தத்தம் விஷயங்களிற் பிரவிர்த்திக்குங் காலத்தில் உதாசீனராகவே யிருக்கின்றார். மாயையால் மோகிப்பிக்கப்பட்ட ஜனங்கள் ஆத்மஸ்வரூபத்தை யறியாமல் தேகேந்திரியாதிகளின் கர்த்துருத்வாதிகளை ஆத்மாவினிடத்தில் ஆரோபிக்கின்றார்கள்.

மூடனானவன் ஆத்மஸ்வரூபத்தை விசாரியாமல் அநாத்மகாரியமான இச் சமஸ்தத்தையும் ஆத்மாவினிடத்தில் ஆரோபிக்கின்றது. எவ்வாறிருக்கின்றதென்னில், பிராந்தியினால் அதிதூரத்தில் மேகம் ஓடச் சந்திரனிடத்தில் ஆரோபிக்கின்றது போலவேயாம்.

வித்வானாகிய மைந்தனே! இப்பொழுது சகத்தினது உற்பத்திக்கிரமத்தைச் சொல்லுகின்றேன் கேள்; பின்னர் ஆத்மாநாத்ம விவேகத்தை நன்றாய்ச்சொல்லுகின்றேன். ஈஸ்வரனுடைய பார்வையினாற் பஞ்சீகிருத பூதங்களி னின்றும் சராசர ஸ்தூலப்பிரமாண்ட முண்டாயிற்று.

நெற்பயிர் முதலான ஓஷதிகள் வாயு தேஜஸ் அப்பு பிருதிவி ஆகிய இவைகள் நான்குவித சரீரங்களுடைய

சமஸ்தர்களுக்கும் அன்னமாயின; சிலர் வாயு பக்ஷகர்களாயும், சிலர் சந்திரசூரியர் இவர்களது கிரணங்களை அசனமாயுள்ளவர்களாயும், சிலர் ஜலங்களை அசனமாயுள்ளவர்களாயும், சிலர் மண்ணைப் பக்ஷிக்கிறவர்களாயும், சிலர் சருகு கற்பொடி திரணங்களைப் பக்ஷிக்கின்றவர்களாயும், சிலர் மாம்சம் பக்ஷிக்கின்றவர்களாயும் சிலர், நெற்கோதுமைகளைப்புசிக்கின்றவர்களாயும் ஜந்துக்கள் ஜீவிக்கின்றார்கள்.

பிராணிகள் தத்தம் கர்மானுசாரமாய் சராயுஜர்களென்றும் அண்டஜர்களென்றும் ஸ்வேதஜர்களென்றும்உத்பிஜ்ஜர்களென்றும் நான்குபிரகாரமாய் உண்டாகின்றார்கள். எவர்கள் ஜராயுஸ் என்னுந் தோற்பையிலிருந்து ஜனிக்கின்றார்களோ அந்த மனுஷர்முதலானவர்கள் சராயுஜர்கள்; முட்டையிலிருந்து உண்டாகின்ற பக்ஷி முதலானவைகள் அண்டஜங்கள்; வேர்வையிலிருந்து உண்டாகின்ற கொசுகு முதலானவைகள் ஸ்வேதஜங்கள்; பூமியைப் பிளந்துக்கொண்டு உண்டாகின்ற மரமுதலானவைகள் உத்பிஜ்ஜங்கள். இப்பெளதிகமாயுள்ள நான்குவிதத் தூலசரீரங்களும் ஈஸ்வர புத்திக்கு விஷயமாகின்றதால் சமஷ்டியென்னப் படும்.

இந்தச் சமஷ்டியை அபிமானித்திருக்கின்ற சைதன்யத்தை வைஸ்வானரனென்றும் விராட்டென்றும் பெரியோர் சொல்லுகின்றனர். சமஸ்த மனுஷ்ய சரீரங்களையும் தானாக அபிமானிப்பதால் வைஸ்வானரனென்றும், தானே நானாவிதமாய் விளங்குகின்ற படியால் விராட்டென்றுஞ் சொல்லப்படும். நான்குவித சரீரங்களையும் தனித்தனி ஜீவர்கள் அபிமானிப்பதால் முன்போல் வியட்டியென்று சொல்லப்படும்.

இந்த வியஷ்டி ஸ்தூல சரீர உபாதியிற் சம்பந்தப் பட்டதும் அவ்வுபாதி தாதாத்மியத்தை யடைந்ததுமா ன சைதன்யத்தை விஸ்வனென்று வேத முடிபறிந் தோர் சொல்வர். சமஸ்த தத்துவங்களுஞ் சேர்ந்த ஸ்தூல சரீரத்தை யபிமானித்த ஜீவனுக்கு விஸ்வனெ ன்னும் பெயர் வந்திருக்கின்றது. இந்த விஸ்வனுக்கு இந்த வியட்டி சரீரமே ஸ்தூல சரீரமென்றும் அன்ன விகாரமாகையால் அன்னமய சரீரமென்றும் சொல்லப் படும். இந்தச்சரீரமானது பிதா மாதாப்புசித்த அன்ன விகாரமான சுக்கில சோணிதத்தால் உண்டாகியும் அன்னத்தாலேயே விருத்தி யடைந்தும் அஃதிலதேல் நாசத்தை யடைந்தும் வாளை யுறை மறைப்பதுபோல் ஆத்மாவை மறைக்கின்றபடியாலும் அன்னமய கோச மென்னப்படும்.

ஆத்மாவானவர் தூலசரீரத்தி லிருந்துகொண்டு சப்தாதி ஸ்தூல விடயங்களைப்புசிக்கின்றபடியால் இந்த ஸ்தூலசரீரம் ஆத்மாவிற்குப் போகாய தனமென்று சொல்லப்படும். இந்த ஜீவனுனவன் தேகேந்திரிய மனங்களுடன் கூடிக்கொண்டு இந்திரிய விஷயங்களா யிருக்கின்ற சப்தாதிகளைப் புசிக்கின்றபடியால் போக் தா வென்னப் படுகின்றனன்.

பதினொரு வாசல்களோடு கூடியிருக்கிற இச்சரீர மான அரண்மனையி லிருக்கின்ற அரசனைப்போல் இந்திரிய வர்க்கங்களால் சேவிக்கப்பட்டவனுய் விஷய போகங்களைப் புசிக்கின்றனன். ஞானேந்திரிய கரு மேந்திரியங்களும் மனுேபுத்தி சித்த அகங்காரங்களும் தத்தம் அதிதெய்வங்களா லேவப்பட்டவையாய் தத் தம் பிரயோஜன நிமித்தம் முயற்சியுடன் சேவகர்கள் போல் இந்தச் சிவராஜாவை பூஜிக்கின்றன.

இந்த ஜீவனானவன் எத்தூல சரீரத்தில் யான் என்னதெனத் ஸ்தூல விஷயங்களைப் புசிக்கின்றானோ அந்த அவஸ்தையானது ஜாக்கிரம் என்னப்படும். சமஷ்டி வியஷ்டிகளை யபிமானித்த விஸ்வ வைஸ்வானராருக்கு முன்போலப் பேதமின்றென்றே தெரியவேண்டும். இப்பொழுது கூறிய ஸ்தூல சூக்ஷ்ம காரணங்களெல்லாம் ஒன்றுசேர்ந்ததே மகாப்பிரபஞ்சமென்னப்படும். இந்த மகாப்பிரபஞ்சத்தில் வளைபட்ட விஸ்வன் முதல் பிராக்ஞன் வரையிலும் உள்ள சைதன்யமும் விராட்டுமுதல் ஈஸ்வரன் வரையிலும் உள்ள சைதன்யமும் ஒன்றே. யாதொரு சைதன்யமானது ஆதியந்தமில்லாததாயும் அவ்யக்தமாயும் உற்பத்தி நாசமற்றதாயும் இருக்கின்றதோ அந்தச் சைதன்யமே மகாபிரபஞ்சத்தோடு வேறுபடாமல் தப்தாய பிண்டம் போலிருக்கின்றது.

எல்லாம் பிரஹ்மம் என்னும் வேத வாக்கியத்திற்குப் பண்டிதர்கள் வாச்சியார்த்தமென்றும் லக்ஷியார்த்தமென்றும் விவரமாய் நிர்ணயம் செய்திருக்கின்றார்கள். வித்வானான மைந்தனே! ஸ்தூலசரீரமுதல் அஞ்ஞானமீறாகக் காரிய காரண லக்ஷணமாயுள்ள சமஸ்த திருசியமும் அனாத்மாவென் றறிவாயாக. அந்தக் கரணம் அதன் விருத்தி இவைகளை அறிகின்றதாயும் நித்தியமாயும் அவிகாரமாயும் யாதொருசைதன்யம் இருக்கின்றதோ அதைச் சூக்ஷ்ம புத்தியால் ஆத்மாவென் றறிவாயாக.

இந்த ஆத்மாவானவர் சர்வாந்தரராயும் ஸ்வப்ரகாசராயும் நிரவயவராயும் யாதினுஞ் சம்பந்தப்படாதவராயும் சுத்தராயும் எப்பொழுதும் ஒரேரீதியாயிருக்கின்றவராயும் நித்தியானந்த அகண்ட ரூபராயும்

இச்சையற்றவராயும் நிர்க்குணராயும் சைதன்யராயும் சாக்ஷியாயும் கேவலராயும் இருக்கின்றார். இந்தப்பிரத்தியகாத்மாவானவர் ஒருகாலும் ஷட்பாவ விகாரங்களோடு கூடுபவர் அல்லர். இந்த விகாரமுள்ள சரீரம் கொல்லப்படினும் ஆத்மா நித்தியராயும் என்றைக்கும் இருக்கின்றவராயும் இருப்பதால் அவர் கொல்லப்படமாட்டார்.

ஜன்மாதி ஷட்பாவ விகாரங்களும் நாநாவிதங்களாய வியாதிகளும், ஸ்தூலம் மெலிவு கருப்பு சிவப்பு அளவு வருணம் ஆஸ்ரமம் என்னு மிவைகளும் ஸ்தூல சரீரத்தில் பிரசித்தமாய்க் காணப்படுகின்றனவே யன்றி இவ்விகாரங்களுக் கெல்லாம் சான்றாய ஆத்மாவினிடத்தில் காணப்படவில்லை. இந்த ஆத்மாவினிடத்தில் அனாத்ம பாவத்தையும் அனாத்மாவினிடத்தில் ஆத்மபாவத்தையும் விபரீதமாய் அத்தியாசம் செய்துகொண்டு மோகமுள்ள ஜனங்கள் சம்சாரத்தை யடைகின்றார்கள்.

நிர்விகாரனா யிருக்கின்ற தன்னை மயக்கத்தால் நான் மனுஷியன் நான் பிராமணன் நான் அஞ்ஞன் நான் அனஞ்ஞன் நான்மகா பாவி நான்பிரஷ்டன் நான் சிஷ்டன் நான்சுகி நான்துக்கி யென்று கற்பித்துக் கொள்வதே அத்தியாசமாம். அனாத்மக்களான பஞ்ச கோசங்களுடைய தர்மங்களான ஜன்ம ஜரா மரண பசி தாக சுக துக்க பய முதலானவைகளை விகார மற்ற ஆத்மாவினிடத்தில் விபரீதமான புத்தி மயக்கத்தால் அஞ்ஞர்கள் ஆரோபிக்கின்றார்கள்.

எவ் வஸ்துவினிடத்தில் பிராந்தியால் எது கற்பிக்கப் படுகின்றதோ அக் கற்பனையினால் உண்டான நின் குணதோஷங்கள் அந்த அதிஷ்டான வத்துவை

அணு மாத்திரமும் அடைய மாட்டாது. மருப்பூமி யானது கானற் பிரவாகத்தால் நனையுமா? நேத்திர தோஷத்தா லுண்டான பீதவர்ணத்தால் வெண்மை யான சங்கு பீதவர்ணமாமா? மூடர்கள் ஆகாசத்திற் கருப்பென்று கற்பிப்பதால் ஆகாசம் நீலமாமா? தயா நிதியாகிய ஸ்ரீ குருஸ்வாமியே! நிர்விஷயமா யிருக்கிற ஆத்மாவினிடத்தில் பஞ்சகோசாத்தியாசமானது எவ் வாறு கூடும்? உலகத்தின்கண் முன்பார்க்கப்பட் டிருக் கும் விஷயத்தில் பின்னொரு விஷயத்தைக் கற்பிக்கின் றார்கள். சுத்திமுதலியவற்றில் சாமியா திசம்பந்தத்தால் வெள்ளி சர்ப்ப முதலான வற்றைக் கற்பிக்கின்றார்கள். அவிஷயமான ஆத்மாவிடத்தில் எவ்வாறு அனாத் மாத்தியாசம் வரும்? முன் அனுபவிக்கப்பட்டதின் சாதிருசிய மல்லவா பின்னொரு வஸ்துவில் அத்தியா சம் செய்யச் சாதனமாகும்.

ஆத்மா ஒருபொழுதும் அனுபவிக்கப் படாததால் அவருடைய சாதிருசியம் விலக்ஷணமான அனாத்மா விடத்தில் எவ்வாறு சித்திக்கும்? அனாத்மா வாகிய பஞ்சகோசத்தில் ஆத்மாவிற் கத்தியாசம் எவ்வாறு வந்தது? எவ் வுபாயத்தால் அவ் வத்தியாசம் நீங்கும்? ஜீவேஸ்வரர்க ளிருவருக்கும் உபாதியிற் சம்பந்தித் தது துல்லியமாயிருக்க ஜீவனுக்குமாத்திரம் பந்தம்வர வேண்டியதென்? ஈஸ்வரனுக்குப் பந்த மில்லாதிருப்ப தென்? கருணைக் கடலாகிய ஸ்ரீகுருமூர்த்தியே! இவை யாவையும் கரதலாமலகம்போல் விளங்குமாறு அடியேற் குக் கிருபா திருட்டியா லுரைத்தருள வேண்டும்.

இவ்வாத்மா அஹம் சப்தார்த்தரா யிருக்கின்ற படியாலும் சமஸ்தர்களுக்கும் பிரத்தியக்ஷமான படியி னாலும் சாவயவருமன்று; ஒன்றற்கு விடயமும் அன்று.

யானின்றென்னு முணர்ச்சி யெவர்க்கு மின்று; யான் இருக்கின்றே னென்னும் உணர்ச்சிதான் யாவர்க்கும் பிரசித்தமா யிருக்கிறது. தானுண்டு என்னும் விஷயத்தில் எவர்களுக்கும் பிரமாணாபேக்ஷையில்லை. சகல பிரமாணங்கட்கும் பிரமாணமாய் ஆத்மாவா யிருத்தலால் அவருண்டு என்பதிற் கேட்கவேண்டிய தென். மாயாகாரியமான அகங்காராதிகளால் மறைக் கப்பட்ட இவ்வாத்மா வானவர் மேகங்களால் மறைக் கப்பட்ட சூரியன் உலகினரால் அனுபவிக்கப் படாதது போல் அனுபவிக்கப் படவில்லையென் றறியவேண்டும். கண்ட வத்துவின்கட்டான் மற்றையவத்துவின் அத்தி யாசம் உண்டாக வேண்டுமென்னும் நியமம் சத்புருஷர் களாற் செய்யப்படவில்லை. இந்த அத்தியாசவிஷயத்தில் பிராந்திதான் காரணமா யிருக்கின்றது.

நேத்திராதி இந்திரியங்கட்கு விஷயமின்றிய ஆகா சத்தின்கண் புத்தி மயக்கத்தால் நீலாதியானவை எவ் வாறு கற்பிக்கப் படுகின்றனவோ அவ்வாறு இவ்வாத்மா வினிடத்தி லனாத்மாக்கள் ஆரோபிக்கப்பட் டிருக்கின் றன. அத்தியாசமானது சாதிருசி யத்தை யபேக்ஷிக்க வில்லை. ஏனெனில் "இச்சங்கம் பீதவர்ணம் உடையது" என்பது முதலான இடங்களில் என்ன சாதிருசியம் அபேக்ஷிக்கப் படுகின்றது? நிருபாதிப் பிராந்திகளில் சாதிருசியாதி யபேக்ஷை காணப்படவில்லை.

உபாதிகளுடன் கூடிய கயிற்றரவு முதலானதிற் றான் சாதிருசியாபேக்ஷை காணப்பட் டிருக்கின்றது. அவ்வாறாயினும் சாதிருசியம் சாற்றுவன் சாவதான மாய்க் கேட்பாயாக. ஆத்மா அத்தியந்தம் நிர்மலரா யுஞ் சூட்சுமராயும் ஸ்வயம் பிரகாசராயும் இருக்கின்

றார்; அவ்வாறே புத்தியுஞ் சத்துவ ஸ்வரூபியாயும் பிரகாச முள்ளதாயும் நிர்மலமாயும் இருக்கின்றது.

சூரியன் முன்பாக ஸ்படிகம் விளங்குவது போல அந்த ஆத்மாவி னுடைய சந்நிதானத்தால் புத்தி ஆத்மாப்போல் விளங்குகின்றது; புத்தி சம்பந்தத்தால் மனம் விளங்குகின்றது; மனதின் சம்பந்தத்தா லிந்திரியங்கள் விளங்குகின்றன; இந்திரிய சம்பந்தத்தால் சரீரம் விளங்குகிறது. ஆதலால், தேகேந்திரி யாதிகளான அனாத்ம வர்க்கத்தில் நானென்னும் புத்தியானது மூடர்களான குழந்தைகளுக்குப் பிரதிவிம்ப முதலானவற்றில் எவ்வாறு பிம்பம் தோன்றுகின்றதோ அவ்வாறே தோன்றுகின்றது. புத்தியின்கண் ஆத்மாவின் அத்தியாசம் உண்டாகக் காரணமாய்ச் சாதிருசிய மிருக்கின்றது.

அத்தியாசமாவது அனாத்மாவின்கண் ஆத்மபுத்தியேயாம். முந்திய முந்திய அத்தியாசத்திற்கு அதற்கு முந்திய முந்தியதே காரணமாகும். சுழுத்தி மூர்ச்சை தெளிந்தவர்களிடத்தில் யாதொரு கர்த்ருத்வாதி சம்சாரங் காணப்படுகின்றதோ அதனேதுவாய அவித்தையானது அநாதியாயிருக்கிறது. அவித்தையின் கண் வாசனையும் அநாதியாயிருக்கிறது. ஏ குழந்தையே! யாதொரு அத்தியாசத்தால் அனர்த்தரூபமா யிருக்கின்ற இச் ஜனன ஜரா மரண வியாதியாதி துன்பம் உண்டாகின்றதோ அந்த அத்தியாச நிவர்த்திக்கு உபாயம் சொல்லுகின்றேன் சாவதானமாய்க் கேட்பாயாக.

ஆத்மாவிற் குபாதியாயிருக்கின்ற அவித்தைக்கு ஆவரணம் விக்ஷேபமென்று மகத்தான இரண்டுசத்திகளுண்டு. அவைகளாற்றான் ஆத்மாவிற்குச் சகல சம்சாரமும் உண்டாயிருக்கின்றது. எந்தச்சத்தியாற் சகத்

நானது மோகத்தையடைகின்றதோ அந்த மூல அவித்யா சத்தியான ஆவ்ருதியென்பது தமோசக்தியாயிருக்கிறது. அதுதான் ஆவரணத்திற்குக் காரணமாயிருக்கிறது. (ஆவ்ருதியென்பது மறைப்பென்றுணர்க). விவேகியாயும் அதி யுத்திசாலியாயும் ஆத்தும தத்துவத்தைச் சிரவணஞ்செய்து வித்துவானா யிருப்பினும் அந்த ஆவரண சத்தியால் மூடப்பட்டவன் ஞான திருஷ்டியால் தன்னிடத்திலிருக்கு மாத்மாவை உணரமாட்டான்.

புருஷப் பிரவர்த்திக் கேதுவான ரஜோசக்திக்கு விக்ஷேபமென்று பெயர். அச்சத்திதான் சத்ரூபஞான ஆத்மாவினிடத்தில் ஸ்தூலமுதலாய்ச் சூட்சுமம் வரை சமஸ்தமாய இவ்வசத்தான சகத்தையும் உண்டாக்குகின்றது. ஜாக்கிரத்திலிருக்கும் புருடனை எவ்வாறு நித்திரையானது மறைக்கின்றதோ அவ்வாறே ஆவரண சக்தி ஆத்மாவைமறைத்து விக்ஷேபசக்தியையும் விருத்தி செய்கின்றது மகத்தான ஆவரண சக்தியானது நிர்மலனை ஆத்மாவை மறைத்த வக்கணமே மயக்கத்தால் புருஷன் அனாத்மாவில் ஆத்மபுத்தியைச் செய்கின்றான். கனவிற்காணப் படுகின்ற சரீரத்தில் யானென்று புத்தி செய்வதுபோல அனாத்ம தர்மங்களான ஜனன மரண பசி தாகம் பயம் ஸ்ரமம் முதலியவற்றைத் தனதிடத்தி லாரோபிக்கின்றனன்.

இப்புருடன் விக்ஷேப சக்தியா லேவைப்பட்டு இருவினைகளைச் செய்து அவைகளின் பலன்களைப் புசிக்கச் சமுசார சமுத்திரத்தி லலைந்து கொண் டிருக்கின்றனன். எவ்வத்தியாச சம்பந்தத்தால் ஆத்மாவானவர் கர்ப்பவாசம் பிறப்பிறப்பு முதலிய துக்க பாரம்

பரையை யடைகின்றரோ அவ்வத்தியாசத்தால் இவ் வாத்மாவிற்குப் பிரபலமான யிச்சம்சார பந்தம் வந் திருக்கின்றது. அத்தியாசமென்பது யாதெனில் ஒரு வஸ்துவை மற்றொரு வஸ்துவாகப் பார்ப்பது. இதற்கு அஞ்ஞானப் பிராந்தியே காரணம். இவ்வத்தியாசமே சம்சாரத்திற்கு முக்கியகாரணம்.

இவ்வத்தியாசமே ஆத்மாவினது சமஸ்த அனர்த் தத்திற்குங் காரணம். ஆகையினாலேயே யிடைவிடாத துக்கரூபமா யிருக்கும் சம்சார பாம்பரை யுண்டா யிருக்கிறது. அத்தியாச முள்ளபொழுது சம்சாரங் காணப்படுகின்றது. அதுநாசமடையில் சம்சாரங் கா ணப்படுகின்றதின்று. அஞ்ஞானி சம்சாரத்தோடு கூடி யிருப்பதையும் ஞானி சம்சாரத்தோடு கூடாதிருப்ப தையும் திருஷ்டாந்தமாய்க் கண்டு கொள்வாயாக. நிவிர்த்தியான் முத்தனென்றும் பிரவிர்த்தியாற் பத்த னென்றும், பிரவிர்த்தியே சம்சாரமென்றும் நிவிர்த் தியே மோக்ஷமென்றும் நீ அறிந்து கொள்வாயாக.

மித்யா ஞானத்தா லுண்டான இவ் வத்தியாச மானது அசத் துருவமா யிருப்பினும் ரஜ்ஜுசர்ப்பம் போல் ஆத்மாவிற்குச் சம்சாரத்தை யுண்டுபண்ணு கின்றது. ஜீவபரமாத்மாக்களுக்கு உபாதியினது சம் பந்தஞ் சமமாயிருப்பினும் உபாதியா லுண்டான பந்த மும் பந்தகாரியமான துக்காதிகளும் சிறிதும் ஈஸ்வர னுக்கு யில்லை.

இந்த மஹேஸ்வர னுக்கு உபாதியான மாயையா னது சுத்தசத்துவப் பிரதானமா யிருப்பதா லம்மாயை யிற் பிரதி பலித்த ஈஸ்வரனுக்குக் கிஞ்சிக்ஞத்வமின்று. அச்சத்வ குணமானது உத்க்ருஷ்ட மானதால் பந்த

மும் விக்ஷேபமும் விக்ஷேப காரியமாய துக்காதியும் சிறிது மீஸ்வானுக்குக் கிடையாது. அதனுற் சர்வக்ஞ ராயும் சுபாவ ஞானியாயும் சுவதந்திரராயும் பிரபுவாயு மிருக்கின்ற ஈஸ்வரன், தானே மாயையை அவலம்பித் துக்கொண்டு சிருஷ்டி திதிசம்ஹாரம் பிரவேசம் நிய மனம் முதலாகிய வியாபாரங்களைச் செய்து கொண்டு தன்மாயையால் ரஜசு தமசுகளை நிக்கிரகம் செய்து கிரீடிக்கின்றுர்.

பிரவிர்த்தி நிவர்த்தியின்கண் தானே சுவதந்திர ராகையால் அவ்வீஸ்வரனை அச்சக்தி யாதொன்றும் செய்யச் சக்தமாக மாட்டாது. ஆவரண விக்ஷேப கார ணத்தால் யாதொருவன் ஆவரண விக்ஷேபங்களை நிக் கிரகானுக்கிரகஞ் செய்யச் சமர்த்தனே அவ்வீஸ்வ ரனேயே சத்கிரியை யுடையவனென்று வேதஞ் செப்பு கின்றது. ஜீவனுக்கு உபாதியான அவித்தையின் கண் சத்துவாம்ச மில்லாததால் ரஜசு தமசுகளுக்குப் பிரா பல்யம்; அதனுல் ஜீவனிடத்தில் அவ்விரண்டன் காரி யங்களும் பிராபல்யமாம்; அதனுல் ஜீவனுக்குப் பந்த மும் பந்தத்தால் சம்சாரமும் சம்பவித் திருக்கின்றது. அச் சம்சாரத்தில் எப்பொழுதும் துன்பத்தையே யடைகின்றனன்.

அவஸ்துவில் வஸ்துவை ஆரோபிப்பது தான் அத்யாசம். அது தானிச் சீவனுக்குச் சம்சாரவேது. அவ் வத்தியாச காரண மேதென்னில் ஆவரண ரூப மான அஞ்ஞானந்தான். ஞானத்தால் அஞ்ஞானம் நிவர்த் திக்க வேண்டுமே யன்றிக் கர்மத்தால் நிவர்த்தி யாகாது. கர்மமானது அவிரோதி யாதலால் அஞ்ஞா னத்திற்குப் பாதகமாகமாட்டாது. கர்மத்தாற் பிராணி

லுற்பத்தி யாகின்றன; கருமத்தால் இலயத்தை யடைகின்றன. ஆதலால் ஜனனமரண பரம்பரை கர்மத்தினுடைய காரியமே. இக்கருமத்திற்குப் பிரயோஜனம் ஜனன மரணத்தைக் காட்டிலும் வேறின்று. இக்கர்மமானது அஞ்ஞானத்தாலேயே விருத்தி யடைகின்றது. ஆகையாற்கருமம் அஞ்ஞான காரியமென் றறியவேண்டும். யாது யாதினாலே விருத்தி யடைகின்றதோ அது அதனால் நசியாது; யாது யாதோடு கூடியேயிருக்குமோ அவை யிரண்டும் ஒன்றற்கொன்று விரோதப்படாது; விரோதப்படுத்தவும் எவர்க்கும் சமர்த்தமு மின்று. சமஸ்தகர்மங்களும் அஞ்ஞானத்தோ டெப்பொழுதும் விரோதியாது. ஆதலால் அஞ்ஞானத்தை நிவர்த்திக்கக் கர்மங்களாற் கூடாது. எந்த வஸ்து உண்டான மாத்திரத்தி லெந்தவஸ்துவிற்கு நாச முண்டாகிறதோ அவ்விரண்டும் விரோத பாவங்க ளுடைய தாதலால் அவைகளுக்கு விரோதங் கூடும். இருட் டொளி கட்கு எவ்வாறு ஒன்றற்கொன்று விரோதமோ அவ்வாறே ஞானாஞ் ஞானங்களுக்கு விரோதங் காணப்படுகிறது. அஞ்ஞானமானது ஞானத்தா லன்றி வேறெவ்விதத் தாலு மில்லை. ஆதலால் அஞ்ஞானம் நசிப்பதற்காக ஞானத்தைப் புத்திமான் சம்பாதிக்கவேண்டும்.

அந்த ஞானமானது ஆத்மாநாத்ம விவேகமன்றி வேறெவ்விதத் தாலுஞ் சித்திக்கமாட்டாது. ஆதலால் புத்திமானாகிய ஆத்மாநாத்ம விவேகத்தைச் செய்ய வேண்டியது. எவ் விவே கத்தால் அநாத்மாவில் யாதொன்றும் புத்திரூபமான விருத்தி பேதிக்கப்படுமோ எவ் விவேகத்தால் ஆத்ம ஸ்வரூபமானது தடையற விளங்குமோ அந்த ஆத்மாநாத்ம விவேகத்தின் பொருட்டே இவ்விவாதமானது நிரூபிக்கப் படுகின்றது.

மூடர்களாயும் வேதந்தவிசார மில்லாதவர்க ளாயும் தங்களை வித்வான்களென்று எண்ணிக்கொண் டிருப்பவர்களாயும் ஈஸ்வரப்பிரசாத மில்லாதவர்க ளாயும் சற்குருகடாக்ஷம் பெறுதவர்களாயும் இருக்கும் உலகினர் சொல்லும் பிரகாரத்தைச் சொல்லுகின்றேன் அன்புடன் நீ கேட்பாயாக. மிகவும் மூடனான ஒருவனுக்குத் தன் புத்திரனிடத்தில் மிகுந்த பிரியம் வருவதாலும், புத்திரன் க்ஷேமமாயிருப்பின் நான் க்ஷேமமாயிருக்கின்றேன் புத்திரன்மரிக்கில் யானும் மரிப்பேனென்றுசெப்பு மனுபவத்தாலுஞ், சுருதி யுக்தியாலும், புத்திரனை யாத்மாவென்று சொல்லுகின்றான். சுருதி யுக்திகள் யாதெனில்:--ஆத்மாவே புத்திரனானென்பது சுருதி; தீபத்தினின்றும் தீப முண்டாவது போலப் பிதாவிடத்தினின்றும் புத்திரன் உற்பத்தி யானனென்றும் பிதாவின் குணங்களெல்லாம் விரையின் குணங்களெல்லாம் அங்குரத்திற் காணப்படுவதுபோல் புத்திரனிடத்திற் காணப்படுவதால் என்பது யுக்தி.

ஆதலால் புத்திரனே ஆத்மாவென்று மூடன் மொழிகின்றான். எவ்வாறு புத்திரன் ஆத்மா ஆவனென்று மற்றொருவன் அம்மதத்தை நிந்திக்கின்றான். நீ கூறுமாறு பிரீதிமாத்திரத்தாற் புத்திரன் ஆத்மாவாம் பக்ஷத்தில், வீடு மாடு தனம் தான்யம் முதலானதிற் கூடப் பிரியங் காணப்படுகின்றது; ஆதலால் அவைகளையும் ஆத்மாவென்று சொல்லலாமே? பின்ன ராத்மா வாரென்னில்; இத்தேகமே ஆத்மா புத்திரனைக்காட்டிலும் தேகத்தி லதிப்பிரியம் காண்கின்றனமையாலும், தீப்பற்றிய வீட்டில் புத்திரனை விட்டுத் தன்னை இரக்ஷிக்க ஓடிவிடுவதாலும், அதே புத்திரனை தன்தேக

போஷணையின்பொருட்டு விற்றுவிடுகையாலும், அதே பிள்ளை விரோதியானுற் கொல்வதாலும் புத்திரன் ஒருகாலும் ஆத்மாவாகான். இன்னும் நீ சொல்லும் யுக்தியும் உபயோகமற்றதே; ஏனென்னில் தீபத்திலிருந் துண்டான தீபாந்தரத்திற்குக் குணரூபங்கள் சமானமா யிருப்பது போற் பிதாவினிடத்திலிருந் துண்டான புத்திரனிடத்தில குணரூபாதிகள் சமானமாய்க் காணவில்லை. அழகுமிக்க பிதாவினிடத்தி னின்றும் அங்கஹீனமான புத்திரனுண்டாவதாலும், குணவானிடத்தி னின்றும் துர்க்குண னுண்டாவ தாலும், பிதாவிற்குக் கிரகம் முதலானதில் எவ்வாறு சுதந்திரமோ அவ்வாறு அவைகளிற் புத்திரனுக்குச் சுதந்திரம் உண்டென்பதின் நிமித்தமாத்திரம் வேதமானது புத்திரனை ஆத்மாவென்று உபசாரமாகச் சொல்லுகின்றதேயன்றி முக்கியவிருத்தியாற் சொல்லவில்லை; ஆகையா லுபசாரமாகச் சொல்லுகின்ற சொல் முக்கியமாகமாட்டாது.

ஆத்மாவானது அகம்பதார்த்த மாதலால் தேகத்தைத்தவிரமற்றவற்றில் யானென்னு முணர்ச்சியுண்டாவதில்லை. தேகம் யானென்பதற்குச் சகல சனங்களும் நிச்சயமான சாக்ஷிகள். சுருதியும் இவ்வன்னரசமயனே புருஷனென்று சொல்லுகிறது. புருஷசப்தத்திற்கர்த்தம் ஆத்மாவாகையால் தேகமே ஆத்மாவென்று சார்வாகமதவாதி சொல்லுகின்றுன். அம்மதத்தைச்சகியாமல் மற்றொருவாதி பரதந்திரமாயும் அசேதனமாயும் இருக்கின்ற தேகமானது எவ்வாறு ஆத்மாவாகுமென்று தூஷிக்கின்றுன்.

இந்தத்தேகம் ஆத்மாவல்லவென்பதற்கு இன்னும் சில ஏதுக்கள் சொல்லுகின்றேன். இந்தத்தேகமானது

இந்திரியங்களாற் சேஷ்டிக்கப்பட்டதாயும் சுயமாய்ச் சலிக்குமாற்ற லற்றதாயும் கிரகஸ்தனுக்குக் கிரகம் போன்று இந்திரியங்களுக்கு வாசஸ்தானமாயும் பால்யாதி யவஸ்தைகளுள்ளதாயும் சுக்லஸ்ரோணிதங்களாலுண்டானதாயும் இருப்பதால் ஒரு பொழுதும் இத்தேகம் ஆத்மாவாக மாட்டாது. யான் செவிடன் யான் குருடன் யான் ஊமையன் என்னு மனுபவம் இருப்பதால் இந்திரியங்கள் தான் ஆத்மா; இந்திரியங்களுக்கு யானென்பதுவும் சேதனத்வமும் காணப்படுகின்றன.

சுருதியும்இந்திரியங்களுக்குச் சேதனத்வம் சொல்லுகின்றது; ஆகையால் இந்திரியங்கள் ஆத்மாவாம். இவ்வாறு சொல்லும் மதத்தைச் சகியாமற் பின்னொருவன் அதைத் தூஷிக்கின்றான். கோடாலி போன்று சாதனமான இந்திரியங்கள் எவ்வாறு ஆத்மாவாகும் கோடாலி முதலான சாதனத்திற்குயாண்டுஞ் சேதனத்வங் காணப்படவில்லை. வேதமானது இந்திரியங்கட்குச் சேதனத் துவத்தை உபசாரமாகச் சொல்லுகின்றதே தவிர சாக்ஷாத்தாய்ச் சொல்லவில்லை.

அசேதனமாயிருக்குந்தீபமானது எவ்வாறுப்தார்த்தங்களை விளக்கிவைக்க மாட்டாதோ அவ்வாறே சக்ஷுராதி இந்திரியங்கள் ஜடமாயிருப்பதால் பதார்த்தங்களை விளக்கிவைக்குமாற்றலற்றனவே. ஆதலால் பஞ்சவிருத்தியோடு கூடின பிராணனனவன் இந்திரியங்களைச் சேஷ்டிப்பதாலும் சாக்கிராதி எல்லா அவஸ்தைகளிலு மிருப்பதாலும் இந்தப் பிராணனே ஆத்மாவெனப்படும். யான்பசியுள்ளவன் யான்தாகமுள்ளவன் என்னும் அனுபவமும் அன்னமயனைக் காட்டிலும் ஆந்தரனுய் ஆத்மா பிராணமய னென்று வேதஞ் சொல்வ

தாலும் பிராணனே ஆத்மாவென்றும் இந்திரியங்கள் ஆத்மாவல்லவென்றும் பிராணாத்மவாதி சொல்லுகின்றான். இந்நிச்சயத்தைச் சகியாத பின்னொரு மூடனானவன் தூஷிப்ப தெவ்வாறெனில்:—இந்தப்பிராணவாயு துருத்தியின்கண்ணுள்ள காற்றுப்போல அடிக்கடியாகியாந்தரங்களிற் போக்குவரவுடனிருக்கும். இது ஆத்மாவாக மாட்டாது; இதாஹிதந் தெரியாததாயும் தான் பிறனென்பது தெரியாததாயும் வேறொன்றையு மறியாததாயும் சடமாயும் எப்பொழுது மசைவுள்ளதாயும் தொழிலோடு கூடியதாயும் இருக்கிறது. மனதிருந்தாற் பிராணன் விளங்குகிறது; மனது தூங்கினாற் பிராணன் விளங்குகின்றதில்லை; சர்வத்தையு மறிகின்றதாயும் அறிதற்குக் காரணமாயும் மனது உளதாதலின் மனதுதான் ஆத்மா; பிராணன் ஆத்மாவாக ஒருகாலும் ஆகமாட்டாது. யான் நினைத்தேன் சிந்தித்தேன் சந்தேகித்தேனென்று அனுபவமிருப்பதாலும் பிராணமயனுக்கு ஆந்தரமாய் ஆத்மா மனோமயனென்று வேதஞ் சொல்லுவதாலும் மனமே ஆத்மாவென்பது யுக்தம்.

இந்நிச்சயத்தைப் பின்னொரு மூடன் சட்சுராதி போன்று சாதனமாயிருக்கின்ற மனதிற்கு ஆத்மத்வம் எப்படிக் கூடுமென்று தூஷிக்கின்றான். சாதனமானது கர்த்தாவால் ஏவப்படுவதே யன்றிச் சுயமாய்ப் பிரவர்த்திக்க மாட்டாது. யாதொருவன் கரணங்களை யேவுகின்றானோ அவனே ஆத்மாவாவன். ஆத்மாவானவர் எப்படியிருப்பரென்றால் சுதந்தரராயும் புருஷராயும் ஒருவராலே யேவப்படாதவராயும் இருக்க வேண்டுவதால் நான்கர்த்தா நான்போக்தா நான்சுகி

யென்று அனுபவம் புத்திக் கிருப்பதாலும் இந்த அகங்காரமானது புத்திதர்ம மாகையாலும் மனோமயனைக் காட்டிலும் அந்தராத்மா விஞ்ஞானமய னென்று வேதஞ் சொல்வதாலும் மனதுக்கு வேறாயிருக்கின்ற கர்த்ரு ரூபமான விஞ்ஞான மயனே ஆத்மா வெனப்படும்.

சுருதியிலும் விஞ்ஞானமயனே யக்ஞம் செய்கின்றான் என்றுங் கர்மங்கட்குக் கர்த்தாவென்றும் முக்கியமாய் விஞ்ஞான மயனுக்குக் கர்த்ருத்து வத்தைச் சொல்வதால் புத்தியே ஆத்மாவென்று பௌத்தன் சொல்கின்றான்; அதைப் பிரபாகரனுந் தார்க்கி கனுமாகிய இருவரும் தூஷித்து எவ்வாறு புத்தி ஆத்மாவாகுமென்று ஆக்ஷேபிக்கின்றார்கள்.

புத்தியானது அஞ்ஞான காரியமான தாலும் அடிக்கடி ரஜசோடு கூடியிருப்ப தாலும் புத்தி முதலானசமஸ்தங்களும் அஞ்ஞானத்தில்லயிக்கின்றபடியாலும் நான் அஞ்ஞானியென்னும் அனுபவம் ஸ்திரீ பாலர்கள் முதலான பேருக்கு மிருப்பதாலும் இந்த அஞ்ஞானமே ஆத்மா; புத்தி ஒருகாலு மாத்மா வாக மாட்டாது. விஞ்ஞான மயத்தைக் காட்டிலும் ஆந்தரமாயிருக்கின்ற ஆனந்தமயனைச் சுருதி ஆத்மாவென்று சொல்வதால் அஞ்ஞான உருவமான ஆனந்தமயன்றான் ஆத்மாவெனப்படும்; துக்கானுபவ மில்லாததால் ஆனந்தமயரென்று சொல்லப்படும்.

சுழுத்தி ரூப அஞ்ஞானத்தில் புத்தி முதலியவை லயிக்கின்றன; துக்கமுள்ளவனுக்குக்கூடச் சுழுத்திமுதலானவற்றில் ஆனந்தமயத்வங் காணப்படுகின்றது. இன்னுஞ் சுழுத்தியி லொன்றுமறியே னென்னும் அனுப

வத்தாலும் முற்கூறிய யுக்திகளாலும் அஞ்ஞானத்திற்கு ஆத்மதத்வம் ஸ்திரமாயிருக்கின்றது. பாட்டானுயாயிகள் அஞ்ஞானம் ஆத்மாவென்பது எப்படிக் கூடும் என்று தங்கள்யுக்திகளால் தூஷிக்கின்றார்கள். ஆத்மாவிற்கு ஞானமில்லாத பக்ஷத்தில் நான் அஞ்ஞானியென்று எவ்வாறு அனுபவம் வரக்கூடும்?

சுழுத்தியி னின்றும் எழுந்தவர்க ளிடத்தில் ஒன்றுமறியாமற் சுகமாய் உறங்கினேனென்று அனுபவங் காணப்படுதலாலும் பிரக்ஞான கனனென்றும் ஆனந்தமய னென்றும் சுருதி சொல்வதாலும் சிற்சடத்வமாகிய உபயமும் மின்மினிபோன்று இருக்கின்றதென்று சொல்லவேண்டி யிருப்பதால் கடகுட்டியாதி போலச் சடமாயிருக்கின்ற கேவல அஞ்ஞான மயரென்று சொல்லுதல்கூடாது. இந்நிச்சயத்தைப் பின்னொரு மகாமூடன் தூஷிக்கின்றான்.

ஆத்மாவானவர் தமப்பிரகாசங்கள் ஒன்றற்கொன்று விரோதமா யிருப்பது போல ஞானத்திற்கும் அஞ்ஞானத்திற்கும் ஓரிடத்திலிருப்பும் சேர்க்கையுங் கலந்திருத்தலு மொண்ணாது. ஆகையா லாத்மா ஞானஞ்ஞானமயரென்று சொல்லுதல் கூடாது. ஞானம் அஞ்ஞானம் புத்தி யதன்குணங்களாதி ஒன்றும் சுழுத்தியிற் கொஞ்சங்கூடக் காணப்படவில்லை; பின்னேயோவெனில், சூனியமே காணப்படுகின்றது.

சுழுத்தி யவஸ்தையில் யாதொன்றுமில்லை நானிருக்கின்றேன் என்னு மறிவுமில்லை; சுழுத்தியிலிருந்தெழுந்த யாவரும் சூனியத்தையே ஸ்மரிக்கின்றார்கள்; ஆகையால் ஞானஞ்ஞான விலக்ஷணமா யிருக்கின்ற

சூனியமே ஆத்மாவென்று சொல்லப்படும். அசத்துத் தான்முன்னே உண்டாயிற்றென்றும் அதினின்றும் சத்துண்டாயிற்றென்றும் வேதமும் சொல்வதாற் சூனியமே ஆத்மா. உண்டான கடமானது முன் ஆகாரமாயிருந்து இப்பொழுது கடமாக வரவில்லை; பின்னையோ, முன்னம் அசத்தாகவே யிருந்தது; அவ்வாறே சமஸ்த ஜகத்தும் அசத்தினின்றும் உண்டாயிருக்கிறது; ஆகையால் சர்வவிதத்தாலும் சூனியமே ஆத்மாவென்பது யோக்கியம். இவ்விதமாக முற்கூறிய வாதிகளனைவரும் தாங்களே பண்டிதர்களென்று ஒருவருக் கொருவர் விரோதிகளாயும் தங்கள் தங்கள் மதத்திற் கனுகூலமான அற்ப சுருதி யுக்தி அனுபவங்களால் நிர்ணயித்த புத்திரன் முதல் சூனிய பரியந்தமுள்ள மதங்களை சாதுக்கள் அந்த வாதிகளுக்கு விரோதங்களா யிருக்கின்ற பிரபலசுருதி யுக்தி யனுபவங்களாற் கண்டித்திருப்பதால் அம்மதங்கள் அனாத்ம விஷய மென்று சாதிக்கப்பட் டிருக்கின்றன.

மகாத்மாக்கள் பிரமாணாந்தரத்தால் பாதிக்கப்பட்டிருக்கின்ற அர்த்தத்தைச் சத்தியமாக அங்கீகரிக்க மாட்டார்கள். ஏ அருமையான குமரனே! புத்திரன் முதற் சூனியமீறாக அனாத்மாத்தான், சந்தேகமில்லை. என்னைக் கருணையாலாட்கொள்ளும் தேசிகமூர்த்தியே! சுழுத்திகாலத்தில் சகலமுஞ் சூனியமா யிருப்பதால் அந்தச் சூனியத்தைத் தவிர வேறேயொன்றும் அனுபவிக்கப்படவில்லை; சூனிய மனாத்மாவானால் அதைப்பார்க்கிலும் வேறே ஆத்மாவென்னும் பெயருடன் கூடின எந்த விஷயத்தையும் அனுபவிக்கப்படவில்லையே, சுழுத்தியி லாத்மா விருந்தாலேன் றெரியக்கூடாது? இருப்ப

தற்கு என்ன பிரமாணம்? அவ்வாத்மாவிற்கென்ன லக்ஷணம்? அகங்காராதிகளெல்லாம் பாதிக்கப்படும்போது ஆத்மா சுயம் எப்படி பாதிக்கப்படாம லிருக்கின்றது? இருதயக்கிரந்தி ரூபமான இந்தச் சம்சயங்களை யுக்தியாகிய கட்கத்தால் சேதித்துக் கிருபைசெய்யவேண்டும்.

அத்தியந்தம் சூட்சுமமாயிருக்கிற யிந்த உன்பிரஸ்னங்களானவை மிகவும் யோக்யங்களாயிருக்கின்றன. சூட்சும புத்திமான்களாயுள்ள பேர்களுக்குத்தான் சூட்சுமமாயுள்ள அர்த்தங்கள் தோன்றும். யாதுயாது உன்னால் வினவப்பட்டதோ அவைகளுக்கெல்லாம் சமாதானமாயும் இரகஸ்யமாயும் சிரேஷ்டமாயும் சூட்சுமமாயும் முமுட்சுக்களா லறியவேண்டியதாயும் இருக்கின்ற அர்த்தத்தைச்சொல்லுகின்றேன்கேட்பாயாக:— புத்தி முதலிய சமஸ்தங்களும் தங்களுக்குக் காரணமாயிருக்கின்ற அஞ்ஞானத்தில் இலயித்து வடபீஜத்தில் வட அங்குரங்கள் நாமரூப விகாசமின்றி யிருப்பது போன்று ஜகத்தும் நாமரூபவிகாசமன்றி யிருக்கிறது. இவ்வாறு சுழுத்தியில் சகத்து இருக்கின்றதே தவிரச் சூனியமா யிருக்கவில்லை.

எப்படி வடமானது சிலவிடத்தில் முளையாயும் சிலவிடத்தில் பீஜரூபமாயும் காரிய காரணரூபமா யிருக்கிறதோ யிதுவும் அப்படியே இருக்கிறது. வேதமானது சுழுத்தி முதலான அவஸ்தைகளில் இந்த ஜகத்தானது அவ்யாகிருதமாக இருக்கின்றதென்று சொல்லுகிறது. சுருதி யுக்திகளால் நிர்ணயிக்கப் பட்டிருக்குமிந்த அர்த்தத்தை யறியாமல் அவ்வவத்தையில் உலகு தோற்றுதலை மாத்திரங்கண்டு ஆத்மாவே சூனியமென்று

சொல்லுகிறார்கள். அசத்பதார்த்தத்தினின்றும் சத்பதார்த்தத்திற்கு உத்பத்தியாண்டுங் காணப்படவில்லை; கேட்கப்படவுமில்லை; மனுஷக்கொம்பினின்றும் ஆகாசபுஷ்பத்தினின்றும் யாது உண்டாயிருக்கின்றது? கடமானது மண்ணினின்றும் உண்டாகவில்லையெனின்; அக்கினியினின்றாயினும் அப்புவினின்றாயினும் உண்டாயிற்றா? அவைகளினின்று முண்டாகவில்லையல்லவா! ஆகையால் எப்பொழுதும் யாண்டும் எந்த வஸ்துவானது எந்த வஸ்துவினின்று முண்டாகின்றதோ அந்தவஸ்துவானது அந்தக் காரண ஸ்வபாவமாகவே யிருக்கும்.

அவ்வாறிலதேல் சமஸ்த சாஸ்திரங்களிலும் உலகங்களிலு நிச்சயிக்கப் பட்டிருக்கிற காரியகாரணபாவம் விபரீதமாய்ப்போகும். மேலும் அசத்திலிருந்து எவ்வாறு சத்து உண்டாகுமென்று வேதமும் நிஷேதிக்கிறது. ஆகையால் அசத்தினின்றும் சத்து உண்டாகமாட்டாது. சூனியமே ஆத்மாவென்பது சுத்தமித்தை. அவ்யக்தனென்றும் பிராக்ஞனென்றும் பெயருள்ள ஆத்மா சுழுத்தியில் சித்தமாயிருப்பதால் அந்த ஆத்மாவிற்குச் சூனியத்வம் எவ்வாறு சொல்லப்படும்? சொல்பவன் பிராந்த சிரேஷ்டனே. சுழுத்தியில் ஆத்மா சூனியமானாரென்று யாவன் உனக்குச்சொன்னான்? அவ்வாறு என்ன யேதுவால் அனுமானித்தாய்? எவ்வண்ணமறிந்தாய்? சொல்லென்று கேட்டால் அந்த மூடாதமன் என்ன உத்திரம் சொல்வன்? சுழுத்தியில் ஆத்மா சூனியமாய்ப் போய்விட்டால் அவ்வாறு போனதை அறிந்தவன் ஆத்மாவைவிட வேறே யார்? அதைச் சொல்பவனும் அதற்கனுரூபமான அடையாளமும் ஆத்மாவைத் தவிர வேறு இல்லை. சுழுத்திகாலத்தில் அனுப

வித்த சூனியபாவத்தைத் தானே சொல்கின்றான். அவ்வாறிருக்கும் மூடனானவன் அக்காலத்திற்றானிருந்ததை ஆலோசியாமல் தனக்குச் சூனியபாவத்தைச் சொல்கின்றனன். சுழுத்தியி லிருக்குந் தருமத்தை ஒருவருஞ் சொல்லாமற்றானே சாக்ஷாத்தா யறிகின்றனன். யாவனக்காலத்திற் புத்திமுதலானதின் அபாவத்தை யறிகின்றானோ அந்த ஆத்மாவே நிர்விகாரனெனப்படுவன். எவனுடைய பிரகாசத்தால் இச்சகல ஜகத்தும் பிரகாசிக்கின்றதோ அந்த ஸ்வப்ரகாசனை விளக்கிவைப்பது யாது? புத்தி முதலிய யாவும் ஜடமாயிருக்கிறது; சூரியனைப் பிரகாசிப்பிக்கின்ற வஸ்து உலகத்தில் எப்படியில்லையோ அப்படி ஆத்மாவைப் பிரகாசிப்பிக்கின்ற வஸ்து வேறேயில்லை; அனுபவிக்கின்றவனும் வேறேயில்லை. சாக்கிரசொப்பன சுழுத்திகளிலுள்ள சமஸ்தத்தையும் எவன் அனுபவிக்கின்றானோ அவ்வறிவா யிருக்கின்ற ஆத்மாவை யாவன் எவ்வாறு அறியச் சமர்த்தனாவன்? எப்படி யாவற்றையும் தகிக்கப்பட்ட அக்கினியைத் தகிக்க வேறேயொரு அக்கினியில்லையோ அப்படியே எல்லாவற்றையும் அறிகின்ற ஆத்மாவை அறிவதற்கு வேறே யறிவில்லை. எப்படி யாவற்றையுந் தகிக்கப்பட்ட அக்கினியைத் தகிக்க வேறே ஒரு அக்கினியில்லையோ அப்படியே எல்லாவற்றையும் அறிகின்ற ஆத்மாவை அறிவதற்கு வேறே அறிவில்லை.

சுழுத்தி காலத்திலுள்ள அஞ்ஞானத்திற்குத் தானாகவே சாக்ஷியாகிச் சுகமாய் விகற்பமில்லாமலிருக்கின்ற இந்த ஆத்மா அக்காலத்தில் புத்தி முதலான அறியக்கூடிய சாதனங்களெல்லாம் இலயித்துத் தான்

ஒருவராகவே யிருப்பதால் ஒன்றையும் பார்க்கவும் கேட்கவுமில்லை; ஒன்றை யறியவுமில்லை. சுழுத்தியில் ஆத்மா உண்டென்பதில் பாலர்கள் முதல் விருத்தர்கள் பரியந்தம் யான் சுகியா யிருந்தேனென் றுண்டா மனுபவத்தைப் பிரமாணமாகப் பண்டிதர்கள் சொல்லுகிறார்கள். சுகமாய்த் தூங்கினேன் என்னு மனுபவமிருப்பதால் இவ்வாறே வரும் ஸ்மரணமே ஆத்மா ஆண்டுண்டென்பதை யனுமிக்கும் சின்னமாம். முன் அனுபவமிலதேல் பின் அதன் ஸ்மரணம் உண்டாகமாட்டாது என்பதாதி யுக்தியும் ஆத்மா உண்டென்பதிற் பிரமாணம். எந்த அவஸ்தையில் ஆத்மாவிற்குக் கர்த்ருத்வாதி யாகிய புத்தியுஞ் சொப்பன தரிசனமும் இருக்கமாட்டாதோ அது தான் சுழுத்தியென்று சொல்லுகின்ற வேதவாக்கியம் ஆத்மா உண்டென்பதற்குப்பிரமாணம். ஆத்மா இல்லாமற்போனால் சுழுத்தியிலொன்றையும் இச்சிக்காமலும் ஸ்வப்னப் பிரபஞ்ச திருஷ்டியில்லாமலும் இருக்க எவ்வாறு கூடும்? அதனு லாத்மா யிருக்கிறது தெரிகிறது; கேவலராயுஞ் சுத்தராயுஞ் சச்சிதானந்த லக்ஷணராயும் இருக்கின்ற இந்த ஆத்மாவானவர் சாக்ஷியா யிருக்கின்றாரென்று வித்வான்களால் முன் சொல்லப்பட்ட பிரமாணங்களால் அறியப்பட்டிருக்கிறார்.

ஆத்மாவிற்கு இலக்ஷணமேதெனில்; சச்சிதானந்தாதிகள்தான்; அதில் காலத்திரயத்திலுங் கெடபடாமலும் நித்தியமாயும் இருப்பதே சத்து; சைதன்ய ஸ்வரூபமாயிருப்பதுவே சித்து; அகண்ட சுக ஸ்வரூபமாயிருப்பதுதான் ஆனந்தம். சத்லக்ஷணத்தை யுடைய ஆத்மாவினது இருப்பில் சாக்கிரம் ஸ்வப்னம் சுழுத்தி

முதலிய அவஸ்தைகளில் இடைவிடாமல் நானிருக்கின்றேனென்று யாதொரு காரணத்தால் உண்டாகின்றதோ அந்தக் காரணத்தால் இந்த ஆத்மா நாசமற்று நித்தியரா யிருக்கிறார். யாதொரு காரணத்தால் நானிருக்கின் றேனென்றே இடைவிடாத அறிவு எப்பொழுதும் காணப்படுகின்றதோ, யானில்லையென்று ஒருபொழுதுங் காணப்படவில்லையோ, அதனாலே ஆத்மாவிற்கு நித்தியத்வம் நிச்சயிக்கப் பட்டிருக்கிறது. போக்குவரவுடைய பால்யாதி யவஸ்தைகளிலும் சாக்கிராதி யவஸ்தைகளிலும் இதற்கன்னியமான சமாதி முதலிய அவஸ்தைகளிலும் புத்தியினது நல்ல விருத்திகளிலும் கெட்ட விருத்திகளிலும் சாக்ஷியான ஆத்மாவானவர் நான் நான் என்று ஸ்திரமாகவும் ஏக ரூபமாகவும் அநுவர்த்தித்திருக்கிறார். எதுபோலெனில், கங்காப் பிரவாகத்தின் அலைகளில் சலமானது இடைவிடாம லிருப்பதுபோல் அகம்விருத்தி முதலியன அடிக்கடிவேறுவேறாய் வருவதாலும் கணந்தோறும் பரிணாமத்தோடு கூடிய விகாரமுள்ளவைகளாயும் இருக்கின்றன. இந்த ஆத்மா நிஷ்களராகையால் நிர்விகாரி; நிர்விகாரியாகையால் இந்த ஆத்மா நித்தியர்; யாதொரு நான் சொப்பனங் கண்டேனோ சுகமாய் உறங்கினேனோ அந்தநானே விழித்துக்கொண்டிருக்கின்றேன் என்று இடைவிடாத அநுபவமிருப்பதால் ஆத்மா உண்டென்பதிற் சம்சயமில்லை.

வேதத்திற் கூறியிருக்கிற சோடசகலைகளுக்குள் சுழுத்தியில் சிதாபாசனுக்கே லயமேயன்றி நிஷ்களராயிருக்கிற ஆத்மாவிற் கொருகாலும் நாசமில்லை. ஆகையால் ஆத்மா நித்தியர். சடபதார்த்தங்களை விளக்கி

வைக்கின்ற சூரியன் பிரகாசரூபனே தவிர எப்படிச் சடரூபனாகமாட்டானோ அப்படிப் புத்தி முதலான தத்துவங்களை விளக்கி வைக்கின்ற ஆத்மா சித்ரூபனே தவிர ஜடரூபனாகமாட்டான்.

கடகுட்டிய முதலிய சடங்களுக்குச் சூரியன் முதலான பிரகாசமன்றி யெப்பொழுதும் தமக்குப் பிரகாசமின்றென்பது எவ்வாறு பிரத்யக்ஷமோ அவ்வாறே புத்திமுதலிய சடங்களுக்கும் ஆத்மாவன்றி ஒருகாலத்தினு மணுவளவேனும் சுயமாய் விளக்கமில்லை.

எவ்வாறு சூரியன் சுயம்பிரகாசனோ அவ்வாறே இந்த ஆத்மாவும் சுயம்பிரகாசரென்றும் கேவலம் சித்ரூபரென்றும் வேதத்தாற் சொல்லப்படுகின்றார்.

எவ்வாறு சூரியனானவன் தான் பிரகாசிப்பதிலும் தனது சந்நிதியி லுள்ள பதார்த்தங்களைப் பிரகாசிப்பிப்பதிலும் அன்னியப் பிரகாசத்தை யணுவளவேனும் அபேக்ஷிக்கவில்லையோ அவ்வாறே சித் ரூபனான ஆத்மாவும் தன்னை யறிந்துகொள்வதிலும் அகங்கார முதலியவற்றை யறிவதிலும் வேறொரு அறிவை யணுவளவேனும் அபேக்ஷிக்கவில்லை.

யாதொருகாரணத்தா லிந்தச் சித்ரூபரான ஆத்மா வானவர் அன்னியப் பிரகாசத்தைச் சற்றும் அபேக்ஷிக்காமல் ஸ்வ ஸ்வரூபத்தினாற் றானே விளங்குகிறாரோ அதனால் ஸ்வப்ரகாசரா யிருக்கின்ற ஆத்மா பிரகாசிப்பதில் அன்னியப் பிரகாசத்தின் அபேக்ஷையின்று. எந்த ஆத்மாவை அருக்கனும் மதியமும் ஒளிர்விக்கவில்லையோ அதை அக்கினியும் மின்முதலியனவும் எவ்வாறு ஒளிர்விக்கும்? யாதொரு ஆத்மவிளக்கத்தைப்

பற்றி யிந்தச் சூரியாதி சமஸ்த ஜகத்தும் விளங்குகின்றனவோ அவ்வாத்மா சமஸ்த அவஸ்தைகளிலும் சுயமாக விளங்குகின்றார்.

ஆத்மா சுகரூபரானபடியால் ஆனந்த ஸ்வரூபர். யாது காரணத்தால் சுகஸ்வரூபரெனில், அதிகப் பிரியத்திற்கு ஆஸ்பதமா யிருத்தலால். சமஸ்த பிராணிகளுக்கும் விஷய சுகத்தில் வைத்திருக்கின்ற பிரீதி மாறிப்போய் விடுகின்றது; தங்கண் வைத்த பிரீதி ஒருபொழுது மழிகின்றதில்லை. தேகேந்திரியாதிகள் சீர்ணங்களாயினும் பிராணன் போம் சமயம்வரினும் அப்பொழுதும் இறக்கமனதின்றித் தான் பிழைத்திருக்க வேண்டுமென்ற ஆசையுடன் கூடியிருப்பதால் ஆத்மாவே அதிப்பிரியர். யாதொரு காரணத்தால் எவ்வாத்மாவிற்குப் பிரியம் உண்டாகும்பொருட்டுச் சகல விஷயங்களும் பிரியமாகக் கிரகிக்கப்படுகிறதோ அக்காரணத்தால் சமஸ்த ஜனங்களுக்கும் அதிகப்ரீதிக் காஸ்பதம் ஆத்மாவேயாம்.

எவ்வாத்மாவானவர் பஞ்சகோசங்கட்கும்ஆந்தரரோ அவ்வாத்மாவே புத்திரனைக் காட்டிலும் தனத்தைக்காட்டிலும் மற்றுமுள்ள சமஸ்தத்தையுங் காட்டிலும் அதிகப் பிரியர். எவ்வஸ்துவானது பிரியமென்று சொல்லப்படுகின்றதோ எப்பொழுதும் அதுபிரியமாகவே யிருக்கவேண்டும்; சம்பத்திலேயும் விபத்திலேயும் ஆத்மாவே பிரியமாயிருக்கின்றாரே தவிர மற்ற வஸ்துக்கள் அவ்வாறிருக்கவில்லை. பிராணிகளுக்கு ஆத்மாவே அதிப்பிரியமா யிருக்கப்பட்டவர். எவ்வாத்மாவிற்குப் பிரியமுண்டாகும்பொருட்டு மனைவி புத்திரன் மித்திரன் இல்லம் தனமுதலிய பதார்த்தங்களும்

வியாபாரம் வியவசாயம் கோரக்ஷணை அரசசேவை வைத்திய முதலிய கிரியைகளுஞ் கிரகிக்கப்படுகின்றனவோ பிரவிர்த்தி நிவிர்த்தி முதலிய எவையெவை இவ்வுலகத்தின்கண் செய்யப்படுகின்றனவோ அவையாவும் தனக்காகவேயன்றி அன்னியனுக்காகவன்று. ஆகையால் ஆத்மாவைக்காட்டிலும் அதிப்பிரியம் வேறில்லை. எவ்வாத்மாவானவர் சகல வஸ்துக்களிலும் அதிப்பிரியராயிருக்கிறாரோ அவரே ஆனந்த ரூபரென்று சொல்லப்படுகிறார். எந்தப் புருஷன் இவருக் கன்னியவஸ்துவைப்பிரியமா யெண்ணுகின்றானோ அவன் துக்கத்தையே அனுபவிக்கின்றான்.

எமது குருமூர்த்தியே இன்னுமொரு வினா வினவுகின்றேன்; அறியாதார்கள் சொல்லை ஞானிகள் குற்றமாக எண்ணார்கள்; ஆதலால் அடியேனையும் பொறுத்தருளவேண்டும். ஆத்மாவேறு சுகமென்பதுவேறு; ஆத்மாசுகரூபரல்ல; அதேனெனில், சகல ஜனங்களும் தமக்குச் சுகம்வர வேண்டுமென் றெத்தனிக்கின்றார்கள்; ஆத்மா சுகரூபரா யிருந்தால் சுகத்தின் பொருட்டு ஏன் எத்தனம் செய்யவேண்டும்? எனது இச் சம்சயத்தைக் கிருபையால் நிவர்த்திசெய்ய வேண்டும்.

மூடனானவன் றன்னை ஆனந்தரூபனென் றறியாமல் பாகியத்திற் சுகத்திற்காக எத்தனிக் கின்றான்; தெரிந்தவன் எவனும் அவ்வாறு எத்தனிக்கமாட்டான். மூடன் தன் வீட்டிலிருக்கின்ற நிக்ஷேபத்தை அறியாது பிக்ஷையெடுத் தலைகின்றான்; தன் கிரகத்திலுள்ள வைப்பை யறிந்த புத்திமானானவன் பிக்ஷக்கேனலைவன்?

மூடனானவன் துக்கரூபமாய தூலசூக்ஷம சரீரங்களைத் தன்னுருவமாய் நினைந்து சுகரூபனானதன்னை மறந்து துக்கத்தைக் கொடுக்கும் அச்சரீரங்களிற் சுகத்தை யிச்சிக்கின்றான். துக்கத்தைக் கொடுக்கப் பட்டவஸ்து சுகத்தைக்கொடுக்க ஒருகாலும் யோக்கியமாகாது. விஷமானது தன்னைப் பானம் செய்யப்பட்டவனுக்கு அமிர்தத்வத்தைக் கொடுக்குமா? பாமரனானவன் ஆத்மா வேறு சுகம் வேறு என்று நிச்சயித்து வெளிச்சுகத்தின் பொருட்டு எத்தனிக்கின்றான், இது உண்மையே; இதிற் சம்சயப்பட வேண்டியதில்லை.

இஷ்டவஸ்துவை நினைப்பதாலும் பார்ப்பதாலும் புசிப்பதாலும் யாதொரு ஆனந்தமானது சகல ஜனங்களுக்குந் தோன்றுகின்றதோ அது எதின் றருமமென்று விசாரிக்கில் அந்த ஆனந்தம் மனதிற்காணப்படுவதால் விஷயதருமமென்று சொல்லக் கூடாது; ஏனென்றால்; விஷயதருமமானால் அது மனதின்கண் எப்படிக்காணப் படும்? ஒரு வஸ்துவின் றருமமானது பின்னொருவஸ்துவிற் காணப் படாதாகையால் விஷயதருமமென்று இந்தச் சுகத்தைச் சொல்லக்கூடாது. அந்தச் சுகம் மனோ தருமமென்னில், விஷயமில்லாத காலத்தில் அச்சுகங் காணப்படாததால் மனோதருமமென்று சொல்லக்கூடாது. இந்தச் சுகமானது மனோதருமமாயிருந்தாலும் விஷயமாகிய அபிவியஞ்சக மில்லாததால் உண்டாகவில்லையென்று சங்கியாதொழிக. ஏனெனில்; விஷயமிருந்தாலும் புருஷனுக்குப் பிரியமில்லாத பக்ஷத்தில் ஆனந்த முண்டாகவில்லை. அவ்வாறு வியஞ்சகமான விஷயமிருக்கையில் வியங்கியமான ஆனந்தம் உண்டாகாதென்பதை வியங்கிய வியஞ்சக பாவத்

தில் யாவருஞ் சம்மதியார். வியங்கிய வியஞ்சகங்களா யிருப்பினும் தூரதிருஷ்ட மென்னும் அப்ராப்தி ரூப மான பிரதிபந்தம்மனதிலிருப்பதால்ஆனந்தந் தோன்ற வில்லை யென்று சங்கிக்கலாகாது. ஏனெனில் பிரிய வஸ்துக் கிடைத்தகாலத்தில் அத்தூரதிருஷ்ட ப்ரதிபந் தங் காணப்படவில்லை.

ஆகையால் இச்சுகம் மனோதருமமல்ல. ஆத்மா நிர்த்தருமராகையால் ஆத்மதரும மென்றுஞ் சொல்லக் கூடாது; பின்னரோ வெனில், புண்ணியத்தி னுடைய இஷ்டவஸ்துவி னுடைய சான்னித்தியத்தால் சத்வப் பிரதானமா யுள்ளமனதில் ஆத்மாவே பிரதிபலிக்கிறார். தெளிவாய ஜலத்தில் சந்திரன் எவ்வாறு பிரதிபிம்பிக் கின்றானோ அவ்வாறே சுத்தசித்தத்தில் யாதொரு ஆனந்தப் பிரதிபிம்பமுண்டோ அதுவே ஆபாசானந் தம்; அது சார்வ பௌமன் முதல் பிரமதேவரீறாய்ப் புண்ணியத்தினது ஏற்றத்தாழ்வால் ஆனந்தமும் ஏற் றத் தாழ்வா யிருக்குமென்று வேதஞ்சொல்லுகிறது.

அந்த விஷயானந்தமானது ஆத்மானந்தமாகாதோ வெனில்? அந்த விஷயசுகம் நசித்துப்போவதாயும் ஒன் றற்கொன்றதிசயமாயும் புண்ணியத்தையே முக்கிய காரணமா யுடையதாயும் இருப்பதால் காரணமான புண்ணியகர்ம நாசத்தால் இவ்வானந்தமும் நாசத்தை யடையும்.

எந்தப் புண்ணியவான்கள் அந்த விஷயானந்தத் தைப் புசிக்கின்றார்களோ அக்காலத்தும் துன்பத் தையே யுறுகின்றார்கள். அப்போகம் பிரியுங்காலத்தில் மகத்தரமான துக்கத்தையே யனுபவிக் கின்றார்கள். (மகத்தரமென்பது மிகவும் பெரிதென்றுணர்க). விஷ

யத்திலுண்டான சுகம் விஷங்கலந்த தேன்போன்று புசிக்குங்காலத்தும் புசித்தபின்னும் துயரையேதரும். புசிக்குங்காலத்திற் றுன்பம் யாதெனில், சுகம் தாரதம்மியமாயிருப்பதாலும் குறைந்துபோமென்னும் பயத்தாலும் சார்வபௌமன் முதல் பிரமதேவரீருயுள்ள பதங்களை அடைந்தவர்களும் துயரே அடைகின்றார்கள். அரசனிடத்தில் அடைந்தவர்களுக்கு எவ்வாறு தாரதம்மியம் முதலாயின உளவோ அவ்வாறுபோலென் றறியவேண்டும்.

ஆகையால் புத்திமான்கள் விஷயசுகத்தை யிச்சிக்கக்கூடாது. ஆத்மானந்தம் யாதெனில் யாதொரு ஆனந்தமானது பிம்பபூதமா யிருக்கின்றதோ ஆனந்தரூபியான அந்த ஆத்மா வானவர் சாஸ்வதராயும் அத்வயராயும் பூரணராயும் நித்தியராயும் ஏகராயும் நிர்ப்பயராயும் இருக்கின்றார்; அவரே அந்தக்கரணத்திற் பிரதிபிம்பித்து பிம்பம்போற் காணப்படுகின்றார்.

பிரதிவிம்பம் காரணமான பிம்பமன்றிச் சித்தியாதாகையால் பிம்பானந்த லேசமே பிரதிபிம்பத்திற் காணப்படுகிறது; கற்றவர்கள் யுத்தியான் மாத்திரம் சொல்லுகின்றார்களேதவிர பிம்பானந்தத்தை யொருபொழுது மனுபவிக்கின்றார்க ளில்லை.

அஞ்ஞானத்திலும் அதன்காரியமான அந்தக் கரணத்திலும் முன்றோன்றுகின்ற ஆத்மா ஜாக்கிரத்திலும் சொப்பனத்திலும் விஷயமாகமாட்டார். துக்கரூபமான ஸ்தூல சூக்ஷ்ம சரீரங்கள் இலயித்த சுழுத்தியில் ஆத்மானந்தம் ஸ்பூரிக்கின்றது. அந்த அவஸ்தையில் அந்த ஆனந்தத்தைவிட வேறே புத்தி யாதிகளுமில்லை, ஒருவிஷயமும் இல்லை; ஆனந்தரூபரான ஆத்மா

மாத்திரமா யிருக்கிறார். அதற்கனுபவ மேதெனில், தூங்கியெழுந்த ஜனங்கள் சுகியாகவே தாங்களிருந்த தாகத் தங்க ளனுபவஞ் சொல்லுகிறார்கள்; இதிற் சம்ச யிக்க இடமில்லை. ஆத்மா சுகமாத்திரமென்பது தூங்கி விழித்த உனக்கு மனுபவந்தானே. உபநிஷத்துக்களின் வாசனையையும் ஆக்ராணியாத வாதிகள் துக்காபாவமே சுகமென்று சொல்லுகின்ற வார்த்தையானது சுத்தப் பொய், சாரமற்றதே. ஓடுமுதலியவற்றிற் றுக்கா பாவங் காணப்படினும் சுகம் அணுமாத்திரையும் அனுபவிக் கப்படவில்லை யென்னு மிது யாவருக்குந் தெரிந்த விஷ யமே.

ஆத்மாவினது ஸ்வரூபம் சத்தென்றுஞ் சித்தென் றும் ஆனந்த கனமென்றும் வேதம் பலதரம் முழங்கு கின்றது. புண்ணியவான்களாயும் மகாத்மாக்களா யும் தீரர்களாயும் பிரஹ்மவித்துக்களாயும் இருக் கின்ற வுத்தமர்களாகிய சாதுக்கள் இந்த ஆனந்த ரூப ரான ஆத்மாவைச் சமாதியிற் பிரத்தி யக்ஷமாக அனுப வித்துச் சுக ஸ்வரூபராயிருக்கின் றார்கள். பிரம்மா முதற் றம்பமீறாய்ச் சமஸ்த பிராணிகளுந் தங்கள் தங் கள் அந்தக்கரணோ பாதிக் கனுகுணமா யிந்த ஆத்மா வின் ஆனந்த லேசத்தைப் பற்றிச் சீவிக்கின்றார்க ளாகையால் ஆன்மா ஆனந்தரூபரென்பதில் என்ன சம் சயம். மதுரக்கட்டி கலந்து செய்த மாப்பணியாரங்க ளனைத்திலுங் காணப்பட்ட மதுரம் மதுரக்கட்டியினு தேயன்றி மாப்பணியாரங்களின் குணமன்றே, அது போல் விஷயங்களில் யாதொரு ஆனந்தங் காணப்படு கின்றதோ அது ஆத்மானந்தத்தின் லேசமேயன்றிச் சடமானவிடயத்தினவன்று. யாவனுக்கு யாண்டியாதின்

சம்பந்தத்தால் சுகங்காணப்படுகின்றதோ அந்தச் சுக மானது ஆனந்தரூபனான ஆத்மாவின் சுகமென்றேயறி யவும்.

நீலோத்பல புஷ்ப விகாசமானது சந்திரகிரணங் களால் உண்டாவதுபோல் இந்தப் பிராணிகளுக்கு ஆனந்தமும் ஆத்மஸ்பூர்த்தியாற்று னுண்டாகின்றது. நிர்க்குணரான ஆத்மாவிற்குச் சச்சிதானந்தங்கள் ஸ்வ ரூபமேயன்றிக் குணங்களாகமாட்டா; அன்னியவஸ்து இருக்குமாகில் அவ்வன்னியத்தை நிராகரிக்கு நிமித் தம் விசேஷணரூபமாகக் குணங்களை ஒப்புக்கொள்ள வேண்டும்; பிரபஞ்சம் பொய்யானதால் வேறேவஸ்து இல்லாதபடியால் அத்விதீயரான ஆத்மாவிற்குச் சச்சி தானங்களைக் குணமாகச் சொல்லக்கூடாது. வேதமும் கேவலர் நிர்க்குணரென்று சொல்வதால் இந்தசச்சிதா னங்களைக் குணமென்று சொல்லுதல் கூடாது. எப்படி அக்கினிக்கு உஷ்ணமும் பிரகாசமும் சொரூபமோ அப்படி ஆத்மாவிற்குச் சச்சிதானந்த முதலாயின ஸ்வரூபமென்றே நிச்சயிக்கப் பட்டிருக்கிறது. ஆன திறைற்றான் சஜாதியாதி பேதங்கள் அத்விதீயனான ஆத் மாவிடத்தி லில்லை.

பிரபஞ்சம் அசத்தியமென் றபவாதிக்கப் பட்ட தால் விஜாதீய பேதமில்லை; அந்தக் கிரமத்தைக் சொல் கின்றேன் ஆதரவோடே கேள். அபவாதமாவதே தெனில் எவ்வாறு பழுதையில் விவர்த்தமான பாம்பா னது சத்தான பழுதையைத் தவிர வேறில்லென்று நிஷேதிக்கப்படுகின்றதோ அவ்வாறு ஆத்மாவில் விவர் த்தமாய்த் தோன்றப்பட்ட பிரபஞ்சத்தைச் சன்மாத்திர மென்று பார்ப்பதே அபவாதமென்று சாதுக்கள்

கூறுகின்றார்கள். புத்திமான்கள் தோன்றப்பட்ட உலகை உண்டாயகிராமத்திற்கெதிராக அதினதின் காரணத்தில் லயம்பண்ணி யுக்திகளாற் சன்மாத்திரமாகவே பார்க்க வேண்டியது. இந்தச் சராசரமான பிரமாண்ட மீரு யிருக்கிற பௌதிகப் பிரபஞ்சத்தைப் பஞ்சீகிருத பூத மாகவே பார்க்கவேண்டும். அஃதெவ்வாறெனில், யாதொரு மண்ணானது காரியரூப கடாதிகளாகக் காணப் படுகின்றதோ அந்தக் காரியங்களை நன்றாய் விசாரிக்கை யில் சத்து உருவமான மண்ணைப்பார்க்கிலும் வேறா காது; பாகியாந்தரங்களில் மண்ணாகவே காணப்படுகி றது; மண்ணைத் தவிர வேறொன்றுங் காணப்படவில்லை மண்ணிற் கன்னியமான நாமம் அனிர்வசனீயம்; மண்ணைத்தானே கலசாதி நாமங்களால் மூடர்கள் சொன்னபோதிலும் அந்தக் கலசாதி ஸ்வரூபத்தை நன்றாய் விசாரிக்கும்போது மண்ணினின்றும் பிறிதாய்க் காணப்படவில்லை; அந்தக் கலசாதி நாமங்கள் சொன் மாத்திரமா யிருக்கிறன.

ஆகையாற் காரியமாயுள்ள பௌதிகங்கள் காரண மாயுள்ள பஞ்சீகிருத பூதங்களைக் காட்டிலும் பின்னமா யிராது. அந்தப் பஞ்சீகிருத பூதங்களும் அவற்றினின் றுண்டாய சப்தாதிகளான அவற்றின் குணங்களும் சூட்சும சரீரங்களும் அபவாதஞ் செய்யில் அபஞ்சீ கிருத பூதமாகவே யிருக்கும்; அந்த அபஞ்சீகிருத பூத மும் அதன் குணமும் சத்வ ரஜஸ் தமஸ் என்னும் முக் குணத்தோடு கூடிச் சொரூபாபாசமாய் இருக்கும்; அவ் யக்தமாகவே யிருக்கும்; சர்வாதாரமாயும் ஸ்வயமாயும் அகண்டமாயும் அனாதியாயும் சுத்தமாயும் பரமமாயும் பிரஹ்மமாயும் சதா ஏகரூபமாயும் யாதொருவஸ்து

விருக்கிறதோ அந்தச் சத் வஸ்துவைக் காட்டிலும் வேறே விகற்பமான ஒரு வஸ்துவுமில்லை. பேதமாய்த் தோன்றுகின்றதே யென்றால், சந்திரனானவன் ஏகனு யிருந்தாலும் நேத்திரதோஷத்தால் துவிதசந்திரனாகத் எவ்வாறு தோன்றுகின்றானோ அவ்வாறு ஏகராயுள்ள ஆத்மாவும் புத்தி தோஷத்தால் நானாவாகத் தோன்று கின்றார். அந்தத் தோஷம் நஷ்டமானால் சந்திரன் போல ஒருவராகவே விளங்குவர்.

பழுதையிற்றோன்றின பாம்பானது பழுதை யின் ஸ்வரூபத்தை யறிகிறதால் பழுதையிற்றானே எப் படி லயிக்கிறதோ அப்படித் தன்னிடத்திற்றோன்றின உலகும் தன் ஸ்வரூபக்ஞானத்தாற் றன்னிடத்திலேயே லயிக்கிறது:

மயக்கத்தா லுண்டாகின்ற துவிதபுத்தி நாசமானால் அத்விதீயமான ஆத்மாவே யிருக்கும்; ஆகையால் நிர் விகற்பப் பிரஹ்மத்தில் விஜாதீய பேதமில்லை. அபேத மான ஆத்மா அஞ்ஞானமான உபாதி யிருக்குங்கால் சஜாதீய பேதமுள்ளவர்போலத் தோன்றுகின்றார் அது யாதுபோலென்னில், கனவானது சத்தப் பொய்யான அனேக பிரபஞ்ச பேதத்தைக் கற்பிக்கிறது; அந்த ஸ்வப்னத்தினின்று விழித்தபோது எப்படித் தான் மாத்திர மிருக்கின்றானோ அப்படி அஞ்ஞானத்தி னின்று விழித்தவனுக்குத் தன்னைக்காட்டிலும் அன் னியமான சஜாதீயமில்லை. கடமில்லாதபோது கடாகாச மெப்படி மகாகாசமாத்திரமோ அப்படி உபாதி யொ ழிந்தால் ஆத்மாவானவர் கேவலம் பிரஹ்மமாகவே யிருப்பர். உபாதி யிருக்குங்கால்பேதமுண்டோவெனில், கடமிருந்தாலும் இல்லாவிடினும் ஆகாசம் பூரணந்தான்;

நித்தியபூர்ண வஸ்துவிற்குப் பரிச்சேதமானது எத ஞல் சித்திக்கும்? பாமரர்களுக்குக் கடாதி பேதத்தால் சின்னமின்றிய ஆகாயம் சின்னம் போற்றோன்றுகிறது. மண்ணென்றுதானே கிராம க்ஷேத்ராதி எல்லை முதலி யன வால் எவ்வாறு நானுவாய்த் தோன்றுகின்றதோ அவ்வாறு பரிபூரணமான பிரஹ்மமும் பிராந்தியாற் கற் பிக்கப்பட்ட நாமரூபங்களாற் பரிச்சின்னம் போற் றோன்றுகின்றார்.

ஆகையால் பிரஹ்மத்திற்கும் கூடஸ்தருக்கும் பேதங் கற்பிதமேயன்றி வாஸ்தவமல்ல. ஆகையால் வேதமும் அடிக்கடித் தத்வமசியென்னும் வாக்கியத் தால் இந்தப் பிரத்தியக் பிரஹ்மங்களுக்கு ஐக்கிய ஞானம் உண்டாகும்பொருட்டு அடிக்கடி ஏகமென்று சொல்லுகின்றது.

அக்தேதெனில், சாமவேதோபநிஷத்தில் உத்தால கர் சுவேதகேதுவிற்கு அத்வைத ஞானம் உண்டாகும் பொருட்டு தத்வமசியென்னும் வாக்கியத்தை யுபதே சித்திருக்கிறார், அதை உனக்குச் சொல்கிறேன் சாவ தானமாய்க் கேள். அந்த உபதேச வாக்கியத்திற்கு வாச்சியார்த்தமென்றும் லக்ஷியார்த்தமென்றும் அர்த் தம் இருவிதமுண்டு. அவற்றுள், வாச்சியார்த்தங்களுக் குப் பிரத்தியக்ஷாதி விரோதமிருப்பதால் வாச்சியங்க ளுக்கு ஐக்கியங்கூடாது, ஆகையால் லக்ஷியங்களுக்குத் தான் ஐக்கியம் சித்திக்கும். தபோநிதியாகிய குருமூர்த் தியே! தத்வம் பதங்களுக்கு அர்த்தம் எத்தனைவிதம்? அந்த இரண்டு பதங்களுக்கு வாச்சியார்த்தம் யாது? இலக்ஷியார்த்தம் யாது? வாச்சியங்களுக்கு ஐக்கியஞ் சொல்வதில் யாது விரோதம்? லக்ஷியார்த்தங்களுக்கு ஐக்கியஞ் சொல்வதில் எப்படி விரோதமில்லை?

அப்படித் தத்வம் பதங்களுக் கயிக்கியஞ் சொல்வி தில் இலக்ஷணாத்ரயங்களில் எந்த இலக்ஷணை அங்கீ கரிக்கப்பட்டிருக்கிறது என்பன முதலிய இவையாவை யும் தயையினாற் றிருவாய்மலர்ந் தருளவேண்டும். வித்துவானாகிய மைந்தனே சாவதானமாய்க் கேட்பா யாக:—நீ செய்த தபசு இப்பொழுதுதான் பலித்தது; இந்த மகா வாக்கியார்த்த சிரவணத்தாலேயே தத்துவ ஞானமுண்டாகும்.

எதுகாலபர்யந்தம் மகாவாக்ய விசாரம் நன்றாகச் செய்யவில்லையோ அதுகாலபர்யந்தம் ஜனனமரண ரூபமான சம்சாரபந்தமுண்டு. சச்சிதானந்தாகண்டை கரச ரூபமாய்த் தானிருப்பதே மோக்ஷம். இது மகா வாக்ய விசாரத்தாலுண்டான அபரோக்ஷ ஞானத்தாற் சித்திக்கும். முமுட்சுவிற்குச் சம்சார நிவர்த்தியின் பொருட்டு மகா வாக்கியார்த்தமே அறியவேண்டு மாகையால் சாவதானமாய்க்கேட்பாயாக. வாச்சிய இல க்ஷிய பேதத்தாற் பலவிதங்களாய் வித்துவான்களால் வாக்கியார்த்தம் சொல்லப்பட்டிருக்கின்றன; அவற்றி லிப்பொழுது உனக்குக் கேட்கத்தகுந்த அர்த்தத் தைச் சொல்லுகின்றேன். தத்வமசியென்னும் வாக்கி யத்தில் மூன்று பதங்களுள. அவற்றுள், முதலிலுள்ள தத்பதத்திற்கு அர்த்தம் சொல்லப்படுகிறது.

சாஸ்திரக்ஞர்கள் இப்பதத்திற்கு வாச்சியமென் றும் இலக்ஷியமென்றும் இருவிதஅர்த்தம் உளவெனச் சொல்லுவார்கள். அவற்றுள் வாச்சி யார்த்தத்தைச் சொல்லுகிறேன். ஆகாச முதலாய் விராட்டு வரையி லுள்ள காரியத்துடன் கூடினதாயுஞ் சத்வகுணமாயு மிருக்கும் சமஷ்டி அஞ்ஞானம் யாதொன் றுண்டோ

அதனவச்சின்னமாயும் சத்திய ஞானாதி இலக்ஷணமா யுஞ் சர்வக்ஞத்வ ஈஸ்வரத்வ அந்தர்யாமித்வ முதலான குணங்களுடன் கூடினதாயும் ஜகத் சிருஷ்டியாதி தொழில்களோடு கூடியதாயும் சர்வஸ்வரூபமாய் வழங்குகிறதாயும் அநந்தகுணங்களோடு கூடியதாயும் அவ்யக்தமாயும் அபரப்ரஹ்மமாயும் யாதொரு சைதன்யமிருக்கிறதோ அதுவேவாச்சியார்த்தமெனப்படும். வேத சம்மதமாய் இலக்ஷியார்த்தத்தையும் சொல்லுகிறேன் கேள். நித்தியமாயும் அசப்தமாயும் அஸ்பர்ஸமாயும் நீரூபமாயும் நீரசமாயும் நிர்க்கந்தமாயும் எண்ணத் தகாததாயும் விடத்தகாததாயும் சொல்லத் தகாததாயும் விவகரிக்கத் தகாததாயும் நிஷ்கிரியமாயும் ஸ்வதஸ்ஸித்த ஸ்வபாவமுடையதாயும் மனது இந்திரியங்களில்லாததாயும் முக்குணங்களற்றதாயும் விகாரமற்றதாயும் சின்னமற்றதாயும் பிராந்தியா லாரோபிக்கப்பட்ட வஸ்துக்களுக்கு அதிஷ்டானமாயும் சத்தாயும் அத்வயமாயும் சுத்தமாயும் புத்தமாயும் முத்தமாயும் கேவலம் ஆனந்தரூபமாயும் நிர்விசேஷமாயும் உள்ள யாதொரு பரப்பிரஹ்மமுண்டோ அதுதான் இலக்ஷியார்த்த மெனப்படும். அவ்வாறே துவம்பதத்திற்கும் வாச்சியம் இலக்ஷியமென் றிரண்டருத்தமுண்டு. அதில் வாச்சியார்த்தத்தைச் சொல்லுகின்றேன் அதுசாதுக்களால் அங்கீகரிக்கப்பட்ட தாதலாற் சாவதானமாய்க் கேட்பாயாக.

புத்தி முதற் றால பரியந்தமான காரிய காரண ரூபிணியாயும் ஆபாச வியஷ்டி லக்ஷணமுடையதாயும் அற்பசத்துவத்தை யுடையதாயும் யாதொருஅவித்தை யுண்டோ அதில் அவச்சின்ன சைதன்யஞ் சீவ

னென்று பெயருள்ளவனும் ஷட்பாவ விகாரங்களு டன் கூடினவனும் யான்பாலன் குமாரன் யவ்வனன் விருத்தன் பெருத்தவன் இளைத்தவன் என்னும் ஸ்தூல தர்மத்தோடு கூடினவனும் ஷடூர்மிசளுடன் கூடினவ னும் யான் ஊமன் குருடன் நபும்ஸகன் நொண்டி போபவன் வருபவன் என்னும் இந்திரிய தருமங்க ளுடன் கூடினவனும் காமம் சங்கற்பம் அர்ஷம் அருவை உத்வேகம் பயம் சிந்தை தாபம் பிரமாதம் முதலான மனோதர்மங்களுடன் கூடினவனும் கர்த் தா போக்தா சுகி துக்கி யென்னும் அகங்கார தர்மங்க ளுடன் கூடினவனும் திரிவிதகரணங்களாற் செய்யப் பட்ட புண்ணிய பாபங்களுடைய பயன்களைப் புசிக்க ஸ்வர்க்க நரகம் முதலான இடங்களுக்குப் போக்கு வரத் துள்ளவனும் சுகதுக்கத்தை யனுபவிக்கின்றவ னும் ஸ்வகருமங்களாற் பிரமிக்கப் பட்டவனும் இருக்கின்ற புருடனே துவம்பதத்திற்கு வாச்சியார்த்த னென்று சொல்லப்படுகின்றான்.

துவம் பதத்தினது இலக்ஷியார்த் தத்தைச் சொல்லுகின்றேன் கேட்பாயாக. அவித்யாகாரிய இல க்ஷணமாயிருக்கின்ற தேகம் இந்திரியசமூகம் பிரா ணன் மனது புந்தி அகங்கார முதலான இவ்வுபாதி களைக் காட்டிலும் விலக்ஷணனும் பூமியில் புதையற் குள்ளிருக்கும் இரத்தினமானது மண் ஓடு முதலிய வற்றைப் பார்க்கிலும் எப்படி விலக்ஷணமாய் விளங்கு கின்றதோ அப்படிப்பஞ்சகோசத்திற்சோதிஸ்வரூபமா யிருந்து விளங்கிக்கொண்டும் அந்தக் கோசங்கட்கும் அதன் அவஸ்தை கட்கும் சாக்ஷியாயும் ஆந்தரனும் விலக்ஷணனும் தடஸ்தனும் நித்திய கூடஸ்தனும்

அசம்சாரியாயும் அறிவு ஸ்வரூபனாயும் நோக்குதல் கேட்குதலாதிகட் கெல்லாம் உள்ளிருப்பவனாயும் ஏக னாயும் சத்தியனாயும் நிரஞ்சனனாயும் நிர்விகாரனாயும் நிராகாரனாயும் அசங்கனாயும் சச்சின்மாத்திர பரனாயும் ஸ்வதஸ்ஸித்தனாயும் சுத்தனாயும் புத்தனாயும் நிர்ச் சகனாயும் நிர்ச்சலனாயும் ஆனந்தைகரசனாயும் பூரண னாயும் சூட்சுமனாயும் சர்வப்ரகாசனாயும் புருஷோத் தமனாயும் இருக்கிற ஆத்மாவே துவம்பதத்திற்கு லக்ஷி யார்த்த மெனப்படும்.

இந்தப்படி பதங்கட்கு அர்த்தங்கள் நிர்ணயிக்கப் பட்டன. இனி வாக்கியார்த்தத்தைச் சொல்லுகிறோம். இத் தத்வமஸியெனும் வாக்கியத்தில் மூன்று சம்பந்தங்க ளுண்டு. எச்சம்பந்தங்க ளிருப்பின் எளிதில் வாக்கி யார்த்த ஐக்கிய ஞானமானது உண்டாமோ அவை சமா னாதிகரண்ய சம்பந்தமென்றும் விசேஷண விசேஷிய பாவசம்பந்த மென்றும் லக்ஷியலக்ஷணபாவசம்பந்த மென்றும் மூன்று வகைத்தாமென்று பெரியோர் சொல்லுகின்றனர்.

பதங்களுக்குச் சமானாதிகரண்யமும், பதம் அருத் தங்கட்கு விசேஷண விசேஷியபாவமும், அர்த்தங் கட்கு லக்ஷியலக்ஷண பாவமும் சொல்லுகின்றார்கள்; ஏகவிபக்தியா யிருப்பதால் சமானாதி கரண்யமும், தத் பதார்த்தம் விசேஷணமாயும் துவம்பதார்த்தம் விசே ஷியமாயும்இருப்பதால் விசேஷணவிசேஷிய பாவமும், ஐக்கியத்தில் இலக்ஷியஇலக்ஷண பாவமும் ஞானமுண் டாகும் பொருட்டுச் சொல்லப்பட் டிருக்கின்றன. பரோக்ஷமுதலான தருமங்களுடன் கூடின சைதன் யத்தைச் சொல்லும் பதத்திற்கும் பிரத்யக்ஷாதி தர்

மங்களுடன் கூடிய சைதன்யத்தைச் சொல்லும் பதத்திற்கும் ஒருசைதன்யத்திற் றுற்பரியம்சொல்லும் சம்பந்தமே சமாஞதி காரண்ய சம்பந்தமென்னப்படும்.

தத்பதார்த்த மாய பரோக்ஷத்வாதி விசிஷ்ட சைதன்யத்திற்கும் துவம்பதார்த்த மாய அபரோக்ஷத்வாதி விசிஷ்ட சைதன்யத்திற்கும் உள்ள பரஸ்பர பேதங்களை நீக்கும் சம்பந்தமே விசேஷண விசேஷிய பாவமெனப்படும். பதார்த்தங்களுக் கயிக்கியம் சொல்வதில் யாதொரு விரோதங் காணப்படுகின்றதோ அந்த விரோதாம்சத்தைத் தவிர்த்து விரோதமின்றியி விருக்கும் சைதன்யத்திற்கு ஐக்கியம் சொல்லும் சம்பந்தமே லக்ஷயலக்ஷண பாவசம்பந்த மென்றுஞ் சொல்லப்படும்.

நீலோத்பல மென்னும் வாக்கியத்தில் எவ்வாறு வாக்கியார்த்தங்கட்கு சாங்கத்ய மிருக்கின்றதோ அவ்வாறு தத்வமசி யென்னும் வாக்கியத்தில் சங்கதிசொல்லக்கூடவில்லை. அஃதேதெனனில், நீலோத்பல மென்னும் வாக்கியத்தில் உத்பலத்திற்கு விசேஷணமா யிருக்கும் நீலகுணம் வேறுகின்றது; அந்நீல விசேஷணங் கொடுப்பதால் வெளுப்பு சிவப்பாய வர்ணங்களுடைய உத்பலம் வேறுகின்றது. இவ்வாறு ஒன்றற்கொன் றுள்ள பேதத்தை வெளிப்படுத்துவதால் நீலோத்பலமென்னுமிடத்தில் விசேஷண விசேஷிய முதலாய சம்பந்தங்களுக்கு வாக்கியார்த்தத்தில் அன்னிய ப் பிரமாண விரோதமில்லை. ஆதலால் தோஷமின்றி வாக்கியார்த்தம் நன்றாய்ச் சங்கதமாகின்றது. அவ்வாறு தத்வமசி யென்னும் வாக்கியத்தில் வாக்யார்த்தம் நன்றாய்ச் சித்திக்கின்றதில்லை.

ஏனென்னில், பரோக்ஷத்வாதி தர்மங்களோடு கூடிய சித்தா யிருக்கின்ற தத்பதத்திற்கும் அபரோக்ஷத்வாதி தர்மங்களுடன் கூடின சித்தா யிருக்கின்ற துவம்பதத்திற்கும் பரஸ்பர முள்ள பேதத்தை நீக்குகின்றதென்று வாக்கியார்த்தத்தில் விசேஷண விசேஷியாதி சம்பந்தம் சொல்லின் பிரத்யக்ஷாதிப் பிரமாணங்களின் விரோதம் வருகின்றது.

ஆதலால் வாக்கியார்த்தம் சங்கதப்படவில்லை. அந்தவிரோதம் எவ்வாறெனில், தத்பதார்த்தனு யிருக்கின்ற ஈஸ்வரன் சர்வேஸ்வரத்வம் சுதந்திரத்வஞ் சர்வக்ஞத்வம் முதலான குணங்களால் சர்வோத்தமனுயும் சத்தியகாமனுயும் சத்தியசங்கற்பனுயும் இருக்கின்முன். துவம்பதார்த்தனு யிருக்கின்ற சிவனே யென்முல் கிஞ்சிக்ஞனுயும் துக்கஜீவியாயும் சம்சாரியாயும் ஈஸ்வராதீனனுயும் பிராகிருதனுயும் இருக்கின்முன். இவ்விருவர்க்கும் ஐக்கியம் எவ்வாறு கூடும்? விருத்த தருமங்கள் உள்ளவர்களாதலால் ஜீவேஸ்வரர் இருவரும் ஒன்றென்பதில் பிரத்தியக்ஷப் பிரமாணத்திற்கு விருத்தமாகின்றது. எவ்வாறு அக்கினிக்கும் பனிக்கும் சப்தத்தாலும் அருத்தத்தாலும் பரஸ்பரம் பேதமிருக்கின்றதோ அவ்வாறு ஜீவேஸ்வரர்களும் பின்னமே. பரோக்ஷத்வ அபரோக்ஷத்வாதி தருமங்கள் வேறு யிருப்பதால் ஜீவேஸ்வர சைதன்யங்களுக்கு ஐக்கியங் கூடாதென்று சொல்லில் சுருதிஸ்மிருதிகட்கு மகத்தான விரோதமுண்டாகின்றது.

ஜீவேஸ்வர சைதன்யங்கள் அபேதமே யென்று இரண்டிற்கு மைக்கியத்தைத் தத்வமசி தத்வமசி யென்று வேதம் அடிக்கடி பரமதாத்பர்யமாய்ச் சொல்

கின்றது; ஆதலினாலே வேதவாக்கியத்தை அங்கீகரிக்கவேண்டும். பரோக்ஷத்வ அபரோக்ஷத்வாதி தருமங்களும் அவற்றின் சம்பந்தமும் கற்பித மானபடியால் அவைகள் வாக்கியார்த்தங்க ளென்று வேதஞ் சொல்லவில்லை; அத்தருமங்களும் வேதத்திற்குச் சம்மதமுமல்ல; மகாவாக்கியத்திற் கருத்தம் அகண்டைகரசமாய்ச் சொல்வதே வேதத் திற்குத் தாற்பர்யம். ஸ்தூல சூக்ஷ்ம ப்ரபஞ்சஞ் சன்மாத்திர மென்று காண்பித்துச் சுழுத்தியிற் சத்தா யிருக்கின்றபிரஹ்மமே தானென்று சொல்லி சத்து ஏகரூபனென்று காண்பிக்க வேண்டுமென்னு மபிப்பிராயத்தால் ஸமஸ்தமுஞ் சத்து ரூபமான ஆத்ம ஸ்வரூபமென்று பிரஹ்மத்திற்கு அத்வைதஞ் சித்திக்கும்பொருட்டு வேதஞ் சொல்லுகின்றதே யன்றி துவிதமிருந்து அதைநிஷேதிக்கவில்லை.

பிரஹ்மத்தைக் காட்டிலும் பிரபஞ்ச மாயினும் ஜீவனாயினும் இருக்கும் பக்ஷத்தில் பிரஹ்மத்திற்கு அத்வைதமானது எவ்வாறு சித்திக்கும்? ஆகையால் ஆத்மாவிற்கும் பிரஹ்மத்திற்கும் அகண்டைகாசமானதே வேதசம்மதமாம். விருத்தாம்சங்களைப் பரித்தியாகம் பண்ணுவதால் பரோக்ஷ அபரோக்ஷ விரோதமில்லை. விரோதமில்லாத அம்சத்தைக் கிரகிப்பதால் வேதசம்மதமான அத்வைத விரோதமில்லை.

வேதமானது சுழுத்தியில் ஸ்தூலசூக்ஷ்மப் பிரபஞ்சங்கட்கு லயமிருப்பதால் ஜீவேஸ்வர சைதன்யங்கள் ஒன்றுதானென்று காண்பிப்பதற்காக எல்லாஞ் சைதன்ய ரூபமென்று சொல்லிப் பிரஹ்மத்திற்கு அத்வைதம் சித்திக்கும் பொருட்டு ஐக்கியத்

தைச் சொல்லுகின்றது. "கங்காயாங் கோஷப்ரதிவசதி" என்பதாதித் தலங்களில் எந்த ஜகல்லக்ஷணையானது அங்கீகரிக்கப் பட்டுள்ளதோ அந்தலக்ஷணை தத்வமசி வாக்கியத்தில் பிரவிர்த்திக்க மாட்டாது. கங்கைக்கும் கோஷமென்னு மிடைச்சேரிக்கும் ஆதாராதேய முத வியவற்ருல் வாக்கியார்த்த போதம் பிரத்யக்ஷத்திற்கு விரோதப் படுகிறது. ஆதலாற் கங்காபதத்திற்குத் தீரத்தில் லக்ஷணை அங்கீகரிக்கப் படுகின்றது.

தத்வமசி யென்னும் வாக்கியார்த்தத்தில் அபரோக்ஷத்வ பரோக்ஷத்வாதி விருத்த தருமங்களுக்கு மாத்திரம் நீக்கமேயன்றிச் சைதன்யாம்சத்தில் விரோதமில்லை. ஆகையால் ஜகல்லக்ஷணை இவ்விடத்திற் பிரவிர்த்திக்க மாட்டாது.

கடினமென்று தேங்காய் முழுவதையுந் தள்ளிவிட்டால் எவ்வாறு நிஷ்பலனுமோ அவ்வாறே பதார்த்தங்கள் முழுமையையும் தள்ளுவதால் வாக்கியார்த்தத்தை யுணரமாட்டான். கங்காபதம் எவ்வாறு தன் அர்த்தத்தை விட்டுத் தீரத்தை லக்ஷிப்பித்ததோ அவ்வாறு தத்பதமேனும் துவம்பதமேனும் தன தருத்தத்தை முழுமையும் விட்டு தத் என்பதின் அருத்தத்தையாவது துவம் என்பதின் அருத்தத்தையாவது லக்ஷிப்பித்தால் அப்பொழுது ஜகல் லக்ஷணைக்கு இவ்விடத்திற் பிரவிர்த்தி சொல்லலாம்; தத்பதமும் துவம்பதமும் அவற்றின் அருத்தமும் கேட்கப் படுவதுபோலதனதர்த்தமும் தெரிகின்றது; அவ்விடத்தில் எவ்வாறு இலக்ஷணை பொருந்தும்? ஆயின் தெரிந்த இவ்விடத்தில் இலக்ஷணை வேண்டியதில்லை யென்று அறிஞர்கள் சங்கித்தல்கூடாது. "சோணோதாவதி"

என்னுமிடத்திற் பிரவிர்த்திக்கும் அஜகல் லக்ஷணையும் ஜகல் லக்ஷணைபோன்று இம் மகாவாக்கியத்திற் பிரவர்த்திக்க மாட்டாது. திரவ்யமின்றிக் குணத்திற்குக் கமனுகமனுதி உலகின்கணின்றுதலால் 'சோணுேதாவதி' யென்னு மிடத்தில் திரவ்யத்தை விடாமலே குணத்தையும் கிரகித்தலால் அஜகல்லக்ஷணை பிரவிர்த்திக்கின்றது.

பிரஹ்மாத்ம ஐக்கியத்தை அறிவிக்கின்ற இம் மகாவாக்கியத்திற் பரோக்ஷத்வ அபரோக்ஷத்வ தர்மங்களுடன் கூடின சைதன்யங்களிரண்டிற்கும் விருத்தாம்சத்தை நீக்காமல் ஐக்கியார்த்தம் சித்திக்க மாட்டாதாதலால் அஜகல்லக்ஷணை இவ்வாக்கியத்திற் பிரவர்த்திக்கமாட்டாது.

தத்பதம் துவம்பதம் இரண்டிற்கும் தமது ஐக்கியார்த்தத்தில் விரோதமாயிருக்கிற அம்சத்தை நீக்கி அவிரோதமாயிருக்கிற அம்சத்தை வாக்கியத்திற் கருத்தமாக பாகத்யாக லக்ஷணை லக்ஷிப்பிக்கின்றது. ஒருபதமானது அவிருத்தமாயிருக்கின்ற தன்னம்சத்தையும் மற்றொரு பதத்தின் அம்சத்தையும் லக்ஷணையால் இலக்ஷிப்பிக்கச் சமர்த்தமாகுமாதலால் பாகத்யாக லக்ஷணையாற் பயன்யாது என்று சங்கிக்கத் தேவையில்லை. பதத்தின தருத்தஞானமானது சுவயமாகவே பின்னொரு பதத்தாற் சித்தமாயுண்டாமேற் பின்னர் லக்ஷணையால் அவ்வருத்தத்தை அறியவேண்டிய அபேக்ஷையென்? ஆதலால் தத்வமசியென்னுமிடத்தில் வாக்கியார்த்தத்திற்கு அகண்டைகரச சித்தியின் பொருட்டுப் பாகத்யாக லக்ஷணைதான் சம்மதமாயிருக்கின்றது. விருத்தாம்சத்தை விடுத்து அவிரோதாம்ச

மானது எந்த இலக்ஷணையால் இலக்ஷிப்பிக்கப் படுகின்றதோ அதுதான் பாகத்யாக இலக்ஷணையென்று கூறப்படும்.

"சோயங்தேவதத்தன்" என்னும் வாக்கியத்தில் தேவதத்தனது ஐக்கியரூபமான வாக்கியார்த்தத்தைத் தோன்றாமற் செய்கின்ற தேசகாலாதிகளான விருத்தாம்சங்களை விடுத்து அவிருத்தமான தேவதத்தனுடைய சரீரத்தைமாத்திரம் பாகத்யாக லக்ஷணைஎவ்வாறு லக்ஷிப்பிக்குமோ அவ்வாறு தத்வமசி யென்னும் மகாவாக்கியத்தில் பரோக்ஷத்வ அபரோக்ஷத்வாதி தர்மங்களுடன் கூடின இரண்டு சித்துக்களும் ஐக்கியரூபமான வாக்கியார்த்தத்திற்கு விருத்தங்களான படியால் பரோக்ஷத்வ சர்வக்ஞத்வாதிகளையும் அபரோக்ஷத்வ கிஞ்சிக்ஞத்வாதிகளையும் நீக்கி அவிருத்தமான சுத்த சைதன்ய லக்ஷணத்தை யுடையதாயும் கேவலம் சன்மாத்திரமாயும் நிர்விகல்பமாயும் நிரஞ்சனமாயும் இருக்கின்ற வஸ்துவைமாத்திரம் பாகத்யாக இலக்ஷணை லக்ஷிப்பிக்கின்றது;

ஆகையால் சமஸ்த உபாதியினின்று விடுபட்டதாயும் சச்சிதானந்தமாயும் அத்வைதமாயும் நிர்விசேஷமாயும் நிராபாசமாயும் அத்தகையது இத்தகையதென்று கூற வொண்ணாததாயும் ஆதி அந்தமில்லாததாயும் சாந்தமாயும் சாஸ்வதமாயும் அச்சுதமாயும் அப்ரதர்க்யமாயும் அறியப்படாததாயும் நிர்க்குணமாயும் உள்ள பிரஹ்மமே சேஷிக்கின்றது.

பிரஹ்மாத்மைக்கிய ஞானத்தால் உபாதிகளாலுண்டான விரோதங்களை நீக்கினால் பிரஹ்மாத்மாக்கட்கு யாதொரு விரோதமுமில்லை. பிரஹ்மாத்மாக்க

ளுக்குண்டான உபாதியும் உபாதிசம்பந்தமும் அதின் தருமம் பற்றுவதும் ஆய சகலஸ்தமும் பிராந்தியினுலே கற்பிதமானதால் விலக்ஷணனை ஆத்மாவினிடத்தி லில்லை. எவ்வாறு கனவிற்கண்ட விடயம் நனவில் மெய் யாகமாட்டாதோ அவ்வாறே யென் றறிக.

கனவிலுண்டாகும் சரீரம் அதின் றருமம் முத லியவற்றைச் சத்தியமாக்க எவ்வாறு முடியாதோ அவ் வாறே மாயையாற் கற்பிக்கப்பட்ட ஜீவேஸ்வர ஜகத் துக்களும் பொய்யாம். இச்சாக்கிரஸ்வப்னங்கட்கு யாது பேதமுளது? இதில் யாது சத்தியம்? எதினின்று யாது யாது தானுண்டாகின்றது? சத்தப் பொய்யே! யாதொரு காரணத்தாற் றிரிபுடி முதலான பிராந்தி யால் உண்டான விஷயங்களால் நிறைந்திருக்கின்ற கனு நனுக்களுக்கு யாதொரு விசேஷமும் ஒருகாலுங் காணவில்லையோ அக்காரணத்தால் எவ்வாறு கனவு மித்தையோ அவ்வாறே சாக்கிரமும் மித்தையாம். இன் னும் நனவுகனவுகள் அவித்யாகாரியங்க ளாகையாலும் சமானமே; திரிபுடிகற்பனை இரண்டிடத்திலுஞ் சமா னமே. சுழுத்தியில் இவ்விரண்டு பிரபஞ்சமும் அபா வமா யிருப்பதை யாவரும் அனுபவிக்கின்ற படியால் இந்த இரண்டிற்கும் பேதங் கிஞ்சித்து மின்று; ஆகையா லிரண்டும் பொய்தான்.

சஜாதிபேதமானது பிரஹ்மத்தினிடத்தில் பிராந் தியாற் காணப்பட்டதே யல்லாமல் வாஸ்தவமா யொரு காலுமில்லை. யாதொரு வஸ்துவில் வேறொன்றும் பார்க்கப்படவில்லை யென்று வேதமானது துவிதத்தை நிஷேதிக்கிறதோ அது யாதுக்கெனில் ஆத்மாவினிடத் தில் பிராந்தியாற் கற்பிக்கப்பட் டிருக்கிற பிரபஞ்சத்

ணைப் பொய்யென்று நாமறிவதற்காகவே. ஆகையால் அத்விதீயமாயும் விகற்பங்க ளற்றதாயும் நிருபாதிகமாயும் நிர்மலமாயும் மாருதசுககனமாயும் இச்சையற்றதாயும் பற்றற்றதாயும் கேவலமாயும் ஏகமாயும் இருக்கின்ற பிரஹ்மமாத்திர மிருக்கிறது. யாதொரு வஸ்துவானது பரமசாந்தமாயும் அனந்தமாயும் அநாதியாயும் ஆனந்தமாத்திரமாயும் விளங்குகின்றதோ அந்த ஸ்வரூபத்தில் நாமரூப பேதங்கள் யாதொன்று மில்லை; குணவிகாரங்களொன்றுமில்லை; வாக்குவியாபார மனோவியாபார மொன்றுமில்லை. யாதொரு இவ்வஸ்துவானது பரமமாயும் அத்வயமாயும் சச்சிதானந்தமாயும் ஜராமரண மில்லாததாயும் நித்தியமாயும் இருக்கிறதோ அந்த வஸ்துவே சத்தியமென்று எனது வார்த்தையை உண்மையாக நம்புவாயாக. அறிவுடைய குமரனே! நீ தேகமன்று; பிராணனுமன்று; இந்திரிய சமூகமும் அன்று; மனோபுத்தி யகங்காரங்களு மன்று; இவற்றின் சமூகமும் நீ யன்று; இவற்றிற் கெல்லாம் சாட்சி ஸ்வரூபமான பிரஹ்மமேநீ. யாதொன்றுண்டாயிற்றோ அதுதான் விருத்தியடைகிறது; காலாந்தரத்தில் அதுதான் மரணத்தை யடைகிறது; உத்பத்தியற்றவனாயும் நித்தியனாயும் வியாபகனாயும் இருக்கப்பட்ட உனக்கு ஜனன மரணங்களில்லை. யாதொரு இந்தத் தேகமானது உண்டாயிற்றோ அதுதான் வளருகின்றது; கருமவசத்தால் நாசத்தை யடைகின்றது; நீயோவென்னில் இந்த தேகாதிகளுடைய அவஸ்தைகளேடோறும் அறிவுருபமா யிருந்துகொண்டு சாக்ஷியாயிருக்கிறாய்.

யாதொரு வஸ்துவானது ஸ்வப்ரகாசமாயுஞ் சர்வாத்மகமாயும் சுழுத்தியிலும் ஏகரூபனாக நான் நா

னென்று விளங்குவதாயும் புத்திமுதலான சமஸ்த விகாரங்களையும் விகார மின்றி யறிவதாயும் போத மாத்திரமாயும் இருக்கிறதோ அந்த ப்ரஹ்மமே நீ. கேவலமாயும் ஞானமாத்திரமாயும் உள்ள யாதொரு பிரஹ்மம் நித்திய வறிவு ரூபமான தன்னிடத்திற் கற்பிக்கப்பட்டிருக்கிற ஆகாசமுதலான சகலஜகத்துக்கும் சத்தையைக் கொடுக்கிறதோ தன்னுடைய தேஜசாற் பிரகாசத்தைச் செய்கிறதோ அந்தப்ரஹ்மந் தான் நீ. யாதொரு வஸ்துவானது சமாதி நிஷ்டர்களான பரமஹம்சர்களால் நிர்மலமா யிருக்கிற மனதில் அபாரசுகரூபமாயிருக்கிற நிஜதத்துவத்தைப் பார்த்துச் சந்தோஷிக்கப் படுகிறதோ அந்த ப்ரஹ்மந்தான் நீ. மண் முதலியவை விகாரமின்றி யிருப்பினும் மூடர்களுக்குக் கடாதி நாமரூபமாய்த் தோன்றுவதுபோன்று பாகியாந்திரங்களி னிறைந்ததாயும் தானாயும் பூரணமாயும் ஏகரூபமாயும் இருக்கின்ற யாதொரு பிரஹ்மமானது மூடர்களுக்குப் பிரபஞ்சம் போன்று தோன்றுகின்றதோ அறிவுமாத்திரமா யிராநின்ற அந்த பிரஹ்மமே நீ. யாதொரு வஸ்துவானது அவ்யயமாயும் அனந்தமாயும் அவ்யக்தமாயும் நாசரஹித மாயும் அநாஸ்ரயமாயும் அப்ரமேயமாயும் ஆனந்தகனமாயும் அநுமயமாயும் அத்விதீயமாயும் வேதத்திற் செப்பப்படுகிறதோ அந்த அறிவு மாத்திரமா யிருக்கும் பிரஹ்மமே நீ. சரீரமும் அதின் சம்பந்தமும் அதின் தருமங்களும் ஆகிய இவை பிராந்தியா லுன்னிடத்திற் கற்பிக்கப்பட்டிருக்கின்றனவே யன்றி வாஸ்தவமாய்ச் சிறிதும்நின திடத்தில்லை. உத்பத்தி யற்றவனாயும் பூரணனாயு மிருக்கிற உனக்கு மிருத்யுபய மெங்கேயுளது? பிராந்தியால் யாதுயாது உன்னாற்பார்க்கப்பட்டதோ அவ்வப்பேதங்க

ளெல்லாம் ஆத்மதிருஷ்டியா னீயாகவே இருக்கின்றாய் உன்னைக்காட்டிலும் அற்பமும் வேறுஇல்லவே யில்லை அத்வயனான உனக்கு எக்காரணத்தாற் பய முண்டாகும்? சமஸ்தத்தையுந் தானாகப் பார்க்கிற புருஷனுக்கு எந்தவஸ்துவாற் பயமுண்டாம்? தன்னாலேயே தனக்கு எங்கேனும் பயமுண்டாமா?

ஆகையினாலே அபயமாயும் நித்தியமாயும் கேவலானந்த ரூபமாயும் நிஷ்களமாயும் நிஷ்கிரியமாயும் சாந்தமாயும் இருக்கின்ற பிரஹ்மமே நீ. திரிபுடி:சூன்யமாயும் ஞாதாவிற் கபின்னமாயும் அகண்டஞான ரூபமாயும் அறியும்பொருட்கு மறியாப்பொருட்கும் அப்பாற்பட்டதாயும் சுத்தபுத்தமாயு மிருக்கப்பட்ட தத்வமான பிரஹ்மமே நீ. அகங்காராதி விகற்பங்களிற் சம்பந்தப்படாததாயும் அறிவுமாத்திரமாயுஞ் சன்மாத்திரமாயும் சமரசமாயும் ஏகரூபமாயும் இருக்கின்ற பிரஹ்மமே நீ. சர்வாகாரமாயும் சர்வாசர்வங்கட்கு வேறுபட்டதாயும் யாவற்றையு நீக்கிச் சேஷிப்பதாயும் சத்தியமாயுஞ் சாஸ்வதமாயும் ஏகமாயும் அனந்தமாயுமிருக்கின்ற பிரஹ்மமே நீ. நித்தியானந்தமாயும் அகண்டைகரசமாயும் நிஷ்களமாயும் அக்ரியமாயும் விகாரங்க ளற்றதாயும் ஆத்மாவினின்றும் பின்னமாயும் பரமாயும் அவ்யக்தமாயும் இருக்கின்ற பிரஹ்மமே நீ. சமஸ்தவிசேஷ சூனியமாயும் ஆகாசம்போல் உள்வெளியெங்கும் பூரணமாயும் ஆனந்தமாயும் பரமாத்வைதமாயும் சுத்தபுத்த தத்வமாயும் இருக்கின்ற பிரஹ்மமே நீ; பிரஹ்மமே நான்; நானே நிர்க்குண நிர்விகற்பமா யிருக்கும் பிரஹ்மமென்று அண்டாகார விருத்தியோடு நிஷ்கிரியமாயுள்ள பிரஹ்மத்தி னிடத்தி லிருப்பாயாக. பிரஹ்மானந்தப் பிரவாகத்தை யுண்டு பண்ணுகின்ற

தாயும் துவைத விருத்திகளை த்வம்சம் பண்ணுகின்ற தாயும் நிர்மலமாயு மிருக்கின்ற இவ் வகண்டாகார விருத்தியை விடாமல் சர்வகாலமு மிருந்துகொண்டு நிரதிசய சுகரூபமான பிரஹ்மத்தினிடத்தில் இரமித்துக்கொண்டு இந்த அகண்டாகார விருத்தியை விடாமலே பிராரத்தத்தை யொழிப்பாயாக. பிரஹ்மானந்தத்தில் மூழ்கிய சித்தத்துடனே சர்வகாலமு மிருப்பாயாக.

கருணாநிதியே! தேவரீர் கூறிய அகண்டாகார விருத்தியானது மகாவாக்கிய சிரவணமாத்திரத்தாலுண்டாகின்றதா? அல்லது வேறுகிரியையை அபேக்ஷிக்கின்றதா? சமாதிஎன்பது யாது? அது எத்தனைவிதம்? அது சித்திக்க யாதுசாதனம்? அச்சமாதிக்கு விக்கினங்கள் யாவை? இவற்றை யெல்லாம் தயைபுரிந்து அனுக்ரகம் செய்யவேண்டும்.

மேதையின்மிகுந்த குமரனே! அதிகாரிகள் முக்கியகௌண பேதங்க ளுடையவர்களா யிருக்கிறார்கள்; அவர்களவர்கள் பிரக்ஞைக் கனுசாரமாய் அகண்டாகார விருத்தியுண்டாகின்றது அனேகஜன்மங்களில்யாதொரு பிராஹ்மணனானவன் சிரத்தாபத்திகளுடன் விஹிதகர்மங்களைச் செய்துஅதனால் ஈஸ்வரனைச் சந்தோஷிப்பித்து அவர்கிருபையால் சித்தசுத்தியும் சாதன சதுஷ்டயமும் சம்பூர்ணமாயுண்டாய்ச் சாதுக்களுக்குச் சம்மதமான குருமுகமாய்ச் சிரவணம் பண்ணுகின்றவனே முக்கிய அதிகாரி யென்று சொல்லப்படுவன். அத்தியாரோப அபவாதக் கிரமத்தை யனுசரித்து அனுக்ரகிப்பவராயும் அறிவுள்ளவராயும் இருக்கின்ற சத்குருவானவர் இம் மகாவாக்கியார்த்தத்தைப் போதித்தமாத்திரத்தி லிந்த முக்கியாதிகாரியான சிஷ்யனுக்கு விரைவிற் பிரஹ்மமே நானென்று அகண்டாகார

விருத்தி யுண்டாகின்றது. அவ்வகண்டாகார விருத்தியானது சிதாபாச னுடன் கூடாததாய் ஆத்மாவிற் கபின்னமான கேவலப் பரபிரஹ்மத்தை மாத்திரம் விஷயீகரித்து அவ்விடத்துள்ள ஆவரண ரூபமான அஞ்ஞானத்தைப் பாதிக்கின்றது. அகண்டாகார விருத்தியா லஞ்ஞானம் பாதிக்கப் படுகின்றபோது அதனாலந்த அஞ்ஞான காரியமா யிருக்கின்ற சமஸ்தமும் பாதிக்கப்படும்.

நூல் தபிக்கப் படுகின்றபோது அதன் காரியமான வஸ்திரமும் எவ்வாறு தபிக்கப்படுகிறதோ அவ்வாறு அஞ்ஞானம் பாதிக்கப்படின் அஞ்ஞான காரியமான சிதாபாச விருத்தியும் பாதிக்கப்படும். பிரதிபிம்பப் பிரகாசமானது பிம்ப சூரியனைப் பிரகாசிப்பிக்க எவ்வாறு அசக்தமோ அவ்வாறே சிதாபாசனுடன் கூடின விருத்தியும் சுவப்பிரகாசமா யிருக்கிற பரப்ரஹ்மத்தை ப்ரகாசப் படுத்தமாட்டாது. உக்கிரமான வெய்யிலில் வைக்கப்பட்ட தீபம்போல் பிரஹ்மப் பிரகாசத்தாற் பிரகாசங்குன்றிப் போயிருக்கிற ஜீவசைதன்யமானது தன்னுபாதியான அசுத்த அந்தக்கரணம் இலயித்தால் பிம்பபூதமான பரப்ரஹ்ம மாத்திரமாக ஆகின்றது. கண்ணாடியை யெடுத்துவிடில் கண்ணாடியிற் பிரதிபிம்பித்த முகமானது உபாதிநீங்கிவிட்டதால் யதார்த்தமாகவே எப்படியாய்விடுகின்றதோ அப்படிச் சீவ சைதன்யமும் உபாதி க்ஷயத்தால் பிரஹ்ம மாத்திரமாயிருக்கிறது. சிதாபாசனென்வன் அப்ரகாசமான கடத்தை விளக்கிவைக்குங்கால் விருத்தியுந் தானுமாயிருந்து கடத்தை விளக்கிவைக்கின்றான். ஸ்வப்ரகாசனான ஆத்மாவை விளக்க அகண்டாகார விருத்திபோதும்; சீவன் தேவையில்லை.

ஆகையால் ஆத்மாவிற்கு விருத்தி வியாப்யத்வ மாத்திரம் உண்டென்றும் பலவியாப்யத்வ மில்லையென்றும் சாதுக்கள் சம்மதித்திருக்கிறார்கள். அதனால் அகண்டாகார விருத்திக்கும் ஆத்மாவிற்கும் விரோதமில்லை. சூக்ஷ்மமா யிருக்கின்ற புத்தியினாலேயே பிரஹ்ம மறியத்தக்கதென்று வேதமுஞ் சொல்லுகின்றது. எவர்க்குப் பிரக்ஞா மந்த முதலாய பிரதிபந்த மிருக்கின்றதோ அவர்க்கிந்த அகண்டாகாரவிருத்தியானது மனனாதிகளன்றியி லுண்டாக மாட்டாது. சிரவணத்தினாலும் மனனத்தினாலும் தியானத்தினாலும் சர்வகாலமும் பிரஹ்ம தாற்பர்யமாக அப்யாசஞ் செய்தால் அந்த புத்தி சூக்ஷ்மம் ஆய் ஆத்மா அதாலுணரப்படும். பிரக்ஞா மந்தமுள்ள பேர்கள் ஆத்ம ஞானம் உண்டாவதின் பொருட்டு நன்றாக அடிக்கடி சிரவண மனன தியானங்கள் செய்யவேண்டியது.

அவற்றுள் குருசந்நிதியில் ஷட்வித லிங்கங்களாற் சகல வேதாந்தங் கட்கும் பரமாத்மா விடத்திற்றாற்பர்யம் என்று நிச்சயம் செய்வதுதான் சிரவணம். அவ்வாறு சிரவணம் புரிந்தபரமாத்மாவை வேதாந்த வாக்கியத்திற்கு அனுகுணமான ஸ்வப்ன திருஷ்டாந்தாதி யுக்திகளால் சார்வகாலமுஞ் சிந்திப்பதே மனனமாம். இது பிரஹ்மசாக்ஷாத் காரத்திற்கு முக்கிய சாதனம். விஜாதீயமான சரீராதி விருத்தியை நீக்கித் தைலதாரைபோன்றும் பிரவாகம் போன்று மிடைவிடாது உண்டாகும் அகண்டாகார சஜாதீய விருத்திப் பிரவாகமே தியானமாம். எதுவரையிலும் பிரமாணகத சம்சயமானது நிவர்த்திக்க வில்லையோ அதுவரையில் சுருதியுக்திகளால் ஆத்மா உண்மைதான், நான் அந்த

ஆத்மாத்தான் என்று நிச்சயம் வருவதற்காக அடிக் கடி மனனம் பண்ணவேண்டும்.

ஆத்மாவினிடத்தில் விபரீத புத்தி யாது காலபரி யந்தம் நிவர்த்திக்க வில்லையோ அதுவரையி லிடை விடாமல் மோக்ஷத்தை இச்சிக்கின்றவன் தியானம் பண்ணவேண்டியது. எதுவரை அபரோக்ஷ ஞானத்தி னுலும் யுக்திகளாலும் திருசிய ப்ரபஞ்சத்தைப் பொய் யென் றறிந்தாலும் மறுபடி முன்போல் ஜகத்துச் சத் தியம் போலத் தோன்றுகிறதோ அது வரையிலும் இந்த தியானத்தை நன்ருய்ச் செய்யவேண்டும்.

சவிகற்பம் நிருவிகற்ப மென்று சமாதியிரண்டு விதம்:--அதிற் சவிகற்பத்தி னிலக்ஷணத்தை முன்னம் சொல்லுகின்றேன் கேட்பாயாக. திரிபுடியோடு கூடி யறிகின்ற கேவலப் பிரஹ்மாகார விருத்தியைத் தான் சவிகற்ப சமாதி யென்று சாதுக்கள் சொல்வார்கள். மண் ணினுற் செய்யப்பட்ட யானையானது மண்ணென்றே தோன்றினும் ஆனைகளின் ஆகார விசேஷங்களும் தோன்றுவதுபோல் இச்சகத்துச் சன்மாத்திரமென்று தோன்றினும் திரிபுடிஞானமுங் கூடத்தோன்றுவதே சவிகற்ப சமாதியென்று சொல்லப்படும். திரிபுடியின் ருேற்றம் அத்யந்தம் தோன்ருமல் மனோ விருத்தி கேவலம் அறிவு மாத்திரமா யிருப்பதே நிர்விகற்ப சமாதியென்று சொல்லப்படும்.

ஜலத்திலிட்ட உப்பானது ஜல மாத்திரமாய்ப் போய் ஜலத்தைக்காட்டிலும் வேருய்த் தோன்ருமல் ஜலமாய் எப்படித் தோன்றுகின்றதோ அப்படிப் பிரஹ் மத்தில் இலயமான விருத்தியும் பிரஹ்மத்தைக் காட்டி லும் வேருய்த் தோன்ருமல் பிரஹ்மமாகவே தோன்

றும். திரிபுடிசூனியமா யிருப்பதா லிந்தச்சமாதி நிர்விகற்பமென்று சொல்லப்படும். ஆயின் சுழுத்திக்குஞ் சமாதிக்கும் பேதமேதெனில்? இரண்டிலுந் திரிபுடிசூனியஞ் சமானமா யிருப்பினும் விருத்தியானது உண்மையும் இன்மையும் ஸ்வரூப ஞானமும் அஞ்ஞானமும் ஆகிய பேதங்க ளிருப்பதால் சுழுத்தியுஞ் சமாதியும் சமமாகமாட்டா. சவிகற்பம் நிருவிகற்ப மென்னு மிவ்விரு சமாதிகளையும் முமுட்சு வானவன் எவ்விதப் பிரயாசைப் பட்டாயினும் விபரீதம் போகு நிமித்தம் அவசியம் செய்யவேண்டும். இச்சமாதிகளைச் செய்யில் விபரீதபாவனை நிவர்த்தியாவதும் அப்ரதிபந்த ஞானமும் சதானந்தமும் உண்டாவதுமே பிரயோசனம்.

இனித் திருசியானு வித்தசமாதி சத்தானு வித்த சமாதிகளையும் சொல்லுகின்றேன் கேட்பாயாக:— சுயம்பிரகாசமா யிருக்கிற அறிவிற்குத் திருசியங்களா யிருக்கின்ற காமாதி விருத்திகளுடன் சம்பந்தமுண்டாய விடத்தில் அந்த விருத்திகளுக்குச் சாட்சியாகத் தானிருக்கின்ற சொரூபானு சந்தானமே திருசியானு வித்த சவிகற்ப சமாதி யென்னப்படும். யான் எனதென்பது முதலான காமக்ரோதாதிகள் எவனாலே காணப்படுகிறதோ அந்த ஆத்மா திருசியமன்று. காமாதி விருத்திகட்குச் சாக்ஷியானவன் திருஷ்டா வவன். காமாதி விருத்திகளோ திருசியங்கள்; எந்த ஆத்மாவானவர் நிஷ்கிரியாயிருந்து விருத்திகளைப் பார்க்கிறாரோ அந்தச் சாக்ஷியா யிருக்கிற ஆத்மாவைத் தன்னிடத்திற் றானகவே அறியவேண்டியது. திருசியமா யிருக்கிற இந்தக்காமாதி சகல விருத்திகளையும் தன்னிடத்தி லயம்பண்ணவேண்டும். நான் தேகமுமன்று; பிராணனுமன்று; இந்திரியசமூகமுமன்று; அகங்காரமு

மன்று; மனதுமன்று; புத்திபுமன்று; அவைகட்கெல்லாம் உள்ளிருந்து அவைகளுடைய விகாரங்கட்கெல்லாம் சாக்ஷியாயும் நித்தியனாயும் பிரத்யக்கானவஸ்துவாயும் இருக்கிறவன் நான். வாக்குக்குச் சாக்ஷியாயும் பிராணவிருத்திக்குச் சாக்ஷியாயும் புத்திக்குச் சாக்ஷியாயும் புத்திவிருத்திக்குச் சாக்ஷியாயும் சக்ஷுராதி இந்திரியங்கட்கு மதன் கிரியைகட்கும் சாக்ஷியாயும் நித்தியனாயும் இருக்கிற பிரத்தியக் ஆத்மாவே நான். நான் பருத்தவனுமன்று இளைத்தவனுமன்று நீண்டவனுமன்று பாலனுமன்று யுவாவுமன்று விருத்தனுமன்று குருடனுமன்று ஊமையு மன்று நபும்ஸகனுமன்று; சாக்ஷியாயும் நித்தியனாயும் இருக்கிற பிரத்யக் ஆத்மாவே நான். நான் வருபவனன்று போபவனன்று கொடுப்பவனன்று கர்த்தாவுமன்று ஏவுபவனுமன்று சொல்பவனு மன்று போக்தாவு மன்று சுகியு மன்று துக்கிபுமன்று; சாக்ஷியாயும் நித்தியனாயும் இருக்கின்ற பிரத்யக் ஆத்மாவே நான். நான்யோகியன்று வியோகியன்று ஆசையுள்ளவ னன்று கோபியன்று காமியன்று லோபியன்று பந்தனன்று முத்தனன்று; சாக்ஷியான ஆத்மாவே நான். அந்தர்ப்பிரக்ஞையு நானன்று, பகிர்ப்பிரக்ஞையு நானன்று, ஞானமுமன்று, அஞ்ஞானமுமன்று, கேட்பவனு மன்று, நினைப்பவனு மன்று, அறிகின்றவனுமன்று; சாட்சியாயிருக்கிற நித்தியப்பிரத்தியக்கே நான். தேகேந்திரிய புத்தியாதிகளோடுமெனக்குச் சம்பந்தமில்லை; புண்ணிய பாபங்களுடைய லேசமும் எனக்கில்லை உண்டிபான; முதலாய ஷடூர்மிகளுக்குத் தூரனாயும், சர்வதா விமுக்தனாயும், கேவலம் சித்ரூபனாயும் இருக்கின்றவனேநான். பாணிபாதங்களில்லாதவனாயும், வாக்கும் சட்சுவு மில்லாதவ னாயும்,

பிராணன் மனது புத்தி யிவைகள் இல்லாதவனும் இருக்கின்ற நான் ஆகாயம்போன்று பூரணனும் நிர்மலனும் ஏக ரூபனும் இருக்கின்ற கேவல சித்துரூபனே நான். இந்த ப்ரகாரந் தன் ஸ்வரூபத்தைப் பாவித்துத் தோன்றப்பட்ட த்ருஸ்ய ப்ரபஞ்சத்தை மனதில் இலயம்செய்து பிராந்தியாற் றோன்றப்பட்ட விபரீத பாவனையை வித்துவானானவன் விட்டுவிடுவன். ஆத்மாவி னிடத்தில் விபரீத பாவனை தோன்றாம லிருப்பதே முத்தியென்று சொல்லப்படும். இஃதெப்பொழுதும் மனோலயம் செய்பவனுக்குத்தான் சித்திக்கும். வேஷத்தாலும் பாஷை யாதியாலும் கேவலா கண்டசித்தான முத்திபிவனுக்குச் சித்திக்கமாட்டாது. அந்த முத்தி சித்திப்பதற்காக எப்பொழுதும் தன் னிடத்தி லகங்காரத்தையும் உபாதிகளிடத்தில் மமகாரத்தையும் விட்டுவிட வேண்டும். ஸ்வ ஸ்வரூபத்தை யகப்படுத்திக்கொண்டு அஞ்ஞானத்தை நாசம்பண்ணி மோக்ஷத்தை யடையவேண்டுமே யன்றிக் கர்மகோடிகளால் முத்தியை யடைதல் கூடாது.

ஆத்ம ஸ்வரூபத்தை யறிந்தாற்றான் சமஸ்த அஞ்ஞானமும் நிவர்த்தியா மென்றும், அஞ்ஞானம் நிவர்த்தியானாற் சமஸ்த துக்கங்களும் க்ஷயமாமென்றும், துக்கக்ஷயத்தால் ஜனனமரணம் போமென்றும் வேதஞ் சொல்லுகிறது. புனர்ஜன்மாதிக ளில்லாமற் போவது மோக்ஷம்; துக்க நிவர்த்தியாற்றான் புனர்ஜன்மாதிக ளில்லாமற் போம்; துக்க நிவர்த்தியானது ஆத்ம நிஷ்டை யாற்றான் சித்திக்கும்; ஆகையால் முமுட்சுவானவன் ஆத்ம நிஷ்டையை யெப்பொழுதுஞ் செய்யவேண்டும். பிராணிகட்கு ஜன்ம மரணாதிகட்குக் காரணம் துக்கங்களென்று சொல்லப்பட்டது

அகந்தாதி வாசனைகள்தான். ஞானக்கினியால் அந்த வாசனைகளைத் தகித்துவிடின் ஜனனமரணாதிகள் மறுபடி உண்டாகமாட்டா. அக்கினியில் வறுக்கப்பட்ட பீஜங்கள் எவ்வாறு மறுபடி முளைக்க மாட்டாவோ அவ்வாறு ஞானக்கினியால் தகிக்கப்பட்ட வாசனைகளும் ஆத்மாவிற்கு மறுபடி ஜனனாதிகளை யுண்டு பண்ண மாட்டா. முமுட்சுவானவன் எவ்விதப் பிரயாசத்தாலாவது ஞான நிஷ்டையைச் செய்ய வேண்டியது. ஆகையால் சர்வவாசனாக்ஷய மாவதின்பொருட்டும் விபரீத பாவனை நிவர்த்தி யாவதின் பொருட்டும் ஞான நிஷ்டையி லிருக்கப்பட்டவனுக்குக் கருமம் செய்தல் பொருந்தாது. கர்மமும் ஞான நிஷ்டையும் ஒன்றற்கொன்று வேறு சுபாவ மானதால் பரஸ்பரம் விரோதமுடைய இவை ஒருவனிடத்திற் சேர்ந்திருக்க மாட்டா. க்ர்மமானது கர்த்ருத்வாதி பாவனையாற் செய்யப்படுகிறது; ஞானங் கர்த்ருத்வாதிகளை நிவர்த்திக்கிறது; தேகாத்ம புத்தி நீங்குவதின் பொருட்டு ஞானம் அப்யாசிக்கப் படுகிறது. கருமமானது தேகாத்ம புத்தியை விருத்தி செய்கிறது; கருமமானது அஞ்ஞானத்தா லுண்டாயிருக்கிறது; ஞானமோ அஞ்ஞானமாகிய பயத்தைப் போக்கடிக்கின்றதா யிருக்கின்றது; கருமமும் ஞானமும் சத்துருவா யிருப்பதால் இரண்டும் எவ்வாறு சேர்ந் திருக்கும்? இருளும் ஒளியும் கண்மூடலுந் திறத்தலும் ஒருகாலத்தில் ஓரிடத்தி லிருக்குமா? எவ்வாறிராதோ அவ்வாறே ஞானகருமங்களும் ஒன்றுசேர்ந் திருக்கமாட்டா. மேற்கே நோக்குபவனுக்குக் கிழக்குப் பார்வை எவ்வாறு ஏககாலத்திற் கூடும்? அவ்வாறு ஆத்மாவில் வியாபித் திருக்கப்பட்ட சித்தத்தோடு கூடியவனுக்குக் கருமத்திற் சித்தம் எவ்

வாறு பிரவிர்த்திக்கக் கூடும்? இடைவிடாமற் ருனே ஞான நிஷ்டையி லிருக்கப்பட்ட முமுட்சுவிற்குக் கருமஞ்செய்யச்சாவகாசமில்லை; அவனுக்குஅந்த ஞான நிஷ்டையே சகலகர்மமும் சந்த்யாவந்தனமும் அதை விட வேறேயொன்றும் அவனுக்குக் கிடையாது. ஞான நிஷ்ட னானவனுக்குத் தன்புத்தியி லிருக்கு மஞ்ஞான வழுக்கைக் கழுவுவதே ஸ்நாநம்; அதனுற் சுத்தி யாவனே தவிர தோயமும் மண்ணுங்கொண்டு செய்வ தால் சுத்தியாகான். ஸ்வ ஸ்வரூபத்தில் மனது யிருப்பதே அனுஷ்டானம். கரணங்களாற் செய்யப் பட்ட கர்மங்களானவை கரணங்கள் எப்படிப் பொய் யோ அப்படியே பொய்யாய்ப்போ மாகையால் சமஸ்த திருசியத்தையும் இலயம் செய்து சொரூப மாத்திரமா யிருப்பதே சந்த்யா அனுஷ்டானம் தானம் போஜனம் முதலனவாம். ஸ்வரூபத்தை யறிந்தவர்க ளும் சுத்தசத்வ சித்தர்களுமான சாதுக்களுக்கு அனு சந்தானத்தைவிட அனுஷ்டானம் வேறு யென் னிருக் கிறது? ஆகையால் முமுட்சுவானவன் வேறே வியாபா ரத்தை விட்டு நிச்சலசித்தனுய் ஞான்நிஷ்டாபரனுக வேயிருக்க வேண்டும். இனிமேல் ஞானத்தை யடைய வேண்டு மென்னுமிச்சை யுள்ளவன் விகித கன்மங்க ளைச் செய்ய வேண்டும். ஞானுப்யாசம் செய்பவனுக்கு ஒருகர்மமுந் தேவையில்லை. எவன் ஞானுப்யாசம் செய் கிருனே அவனுக்கு ஞானத்தைத் தவிர வேறே கர்மஞ் செய்வது கொஞ்சங்கூட யோக்கிய மன்று; அஃதெவ்வாறெனில், பனைமரத்தி லேறுகின்ற வன் வேறேகிரியையில் மனதை வைப்பனேல் எவ் வாறு கீழேவிழுவனே அவ்வாறென் றறியவேண்டும். இவ்வாறு ஞானுப்யாசம் செய்யப்பட்டவனுயும் சித்த

ளுயும் கிருதகிருத்யனுயும் இருக்கின்ற ஞானிக்குப் பகிர்முகதிருஷ்டியே கிடையாது; அவனிடத்திற் கரும வார்த்தையே கிடையாது. இதுவரை சொல்லிய சமாதி யானது திருசியானுவித்த சமாதி யென் றறியவேண் டும்.

இனிச் சத்தானுவித்த சமாதி சொல்லப்படும். காம க்ரோதாதிகளான திருசியங்களை இலயஞ்செய்து நான் சுத்தன் என்பன முதலான இனிச் சொல்லப்படும் சப்தங்களுடன் கூடிச் சித்தமானது ஆத்மாவினிடத் திலேயே முக்கியமா யிருப்பதே சத்தானுவித்த சமாதி யென்னப்படும். அந்த சப்தங்களாவன:--நான் சுத்தன், நான்புத்தன், பிரத்யக்ரூபனுன நித்திய சித்தன், சாந் தன், ஆனந்தன் நான், இடைவிடாத பரமானந்த சமுத் திரமே நான், ஆதியும் அனுதியும் நான், வாக்கிற்கு மன திற்கும் எட்டாத வஸ்துவே நான், வேத வாக்குகளா லறியத் தக்கவன் நான், கெடுதலற்ற அகண்டஞானரூப னுனவன் நான், அறிபொருள் அறியாப்பொரு ளிவற் றிற்கு வேருயிருப்பவன் நான்.

மாயை மாயா காரியங்களுக்கு லேசமும் ஆஸ்ரய மற்றவனே நான், கேவலந்திருக்கா யிருப்பவனே நான், அறிவு மாத்திரமாய் எப்பொழுதுந் தோன்றுபவனே யான், முன்பின் னில்லாதவனே யான், பாகியாந்தரங்க ளிற்பூரணனே நான், ஜராமரணமற்றவன்நான் நித்தியா னந்தன் நான், அத்விதீயன் நான்,பிரத்யக்கபின்ன மான வன் நான், அகண்டன் நான்,சத்தியஞானுதி லக்ஷணன் நான், வேதத்தா லறியக்கூடிய பரஞ்சோதி ரூபப்பரப்ர ஹ்மமே நான். இவ்வாறு பிரஹ்ம மாத்திரத்தைப்போ திப்பிக்கும் சப்தங்களால் சன்மாத்திர வத்துவிற் புத் தியை நிச்சலமாய் வைக்கவேண்டும்.

சத்தானுவித்த நிருவிகற்ப சமாதியாவது:—ஆத்மாவினிடத்தில் மனது வியாபித்துத் திருசிய சப்தங்களை நிவர்த்தித்து ஆத்மைக்ய நிஷ்டையோடிருப்பதேயாம். எந்த முமுட்சுவானவன் சவிகற்ப சமாதியை அதிககாலம் நிரந்தரம் ஆதரவோடும் அப்யாசம் செய்துகொண்டு வருகின்றானோ அவனுக்கே நிருவிகற்ப சமாதி சித்திக்கும். சர்வகாலமும் நிர்விகற்ப சமாதி நிஷ்டையோடிருக்கப்பட்ட முமுட்சுவிற்கு ஜனனாதி நிவர்த்தியும் தடையற்ற நித்திய நிச்சல நிரந்தர மோக்ஷ சுகமுஞ் சித்தமாயுண்டாகும். யாதொரு பிரஹ்ம ஞானியானவன் யான் எனது எனச் சிறிதும் பாகியாந்தர விஷயக்ஞானமில்லாதவனாய் ஆத்மானந்தா மிர்தவாரிதியில் மூழ்கியிருக்கிறானோ அவன் அசங்கனாய் ஏகனாய்த் தூஷ்ணீம் பூதனாயிருப்பன். நிர்விகற்பமான பிரஹ்மத்தினிடத்திலேயே நிஷ்டையுள்ள யிவர்கள்தான் ஜீவன் முத்தர்களாக யாவராலுங் கொண்டாடத் தக்கவர்கள். முமுட்சுவிற்குத் துவிதநிவர்த்தியின் பொருட்டு முன் சொன்ன சமாதிகள் எவ்வாறு ஆந்தரத்திற் பிரயத்தனத்தோடும் செய்யவேண்டுமோ அவ்வாறே பாகியத்திலும் அந்தச்சமாதிகள் செய்யவேண்டும். அந்தப் பிரகாரத்தைச் சொல்லுகின்றேன் கேள். சச்சிதானந்த பிரஹ்ம ஸ்வரூபமான அதிஷ்டானத்திடத்தில் நாமரூபமான ஜகத்தானது ஆரோபிக்கப் பட்டுப் பிரதீதி யாகிறது. சத்துச்சித்து ஆனந்தம் என மூன்றம்சங்களோடு கூடியிருக்கிற பிரஹ்மத்தினிடத்தில் ஆரோபிக்கப்பட்டிருக்கிற ஜகத்திற்கு நாமம் ரூபம் என இரண்டம்சங்களே யுள. இந்த ஐந்து அம்சங்களேயும் ஒன்றுசேர்த்து மூடர்கள் இதுஜகத்தென்று பிராந்தி

யால் சொல்லுகின்றார்கள். அஃதெவ்வா றெனில் குளிர்ச்சி வெண்மை நெகிழ்ச்சி நீட்சி தரங்க மென்னும் பெயருடன் கூடினஜலத்தையே அலையென்று எவ்வாறு சொல்லுகிறார்களோ அவ்வாறென் றறிவாயாக. சன்மாத்திரப் பிரஹ்மத்தினிடத்தில் ஆரோபிக்கப்பட்டிருக்கும் நாமரூபங்களை அனாதரவு செய்து ஸ்வரூப மாத்திரத்தைக் கிரகிப்பதுதான் பாகிய திருசியானுவித்த சமாதி யென்று சொல்லப்படும். முமுட்சுவானவன் சச்சிதானந்த ரூபமான பிரஹ்மத்தி னிடத்தில் நாமரூபங்களை வேறாக்கிப் பின்னவைகளைப் பிரஹ்மமாக அபவாதித்து அந்தஅதிட்டானமான சச்சிதானந்தப் பிரஹ்மமெதுவோ அதுவே நானென்று திடமான நிச்சயபுத்தியுட னிருக்கவேண்டும். சத்ரூபனான நான் பிருதிவி அப்புத் தேயு வாயு ஆகாயம் ஆகிய இவைகளோடேனும் இவைகளின் காரியத்தோடேனும் சேர்ந்தவனன்று; இவைகட்கெல்லாம் யாதொன் றதிட்டான பூதமோ அந்தச்சுத்த ப்ரஹ்மமே நான்; நான் சத்தமுமன்று ரூபமுமன்று நான்பரிசமு மன்று நான்ரசமு மன்று நான்கந்தமு மன்று; இவைகட்கெல்லாம் அதிட்டான பூதமாயும் சுத்தமாயும் ஏகமாயும் பரமாயுமிருக்கிற சத்தேநான். நான் தேகமன்று இந்திரியங்களும் பிராணவாயுக்களும் மனோபுத்தி யகங்காரங்களும் நானன்று; இவைகட்கெல்லா மதிட்டான பூதமாயுஞ் சுத்தமாயும் ஏகமாயும் உள்ள பரமாத்மஸ்வரூபமே நான். தேசம் காலம் திக்காதிகள் சத்ரூபமாக மாட்டா; இவைகட் கெல்லாம் அதிட்டானபூதமாயும் சுத்தமாயும் சுகமாயும்இருக்கிற சத்ரூபனே நான்; திருசியமான இந்நாமரூப ஜகத்தெல்லாம் அதிஷ்டானமான சத்திய பிரஹ்மந்தா

னென்று அறிந்தவன் போதல் வருதல் இருத்தல் படுத்தலாதிக் கிரியைகளைச் செய்துகொண்டிருக்கை யிற்கூட எப்பொழுதும் பாகிய சத்தானுவித்த சமாதியைச் செய்துகொண்டே யிருக்கவேண்டும். ஆரோபிதமான நாமரூபாதிகளை நீக்கி நிர்மலமாயும் அத்துவிதமாயும் பரமானந்த ரூபமாயும் இருக்கிற பிரஹ்மந்தான் நானென்று பாவிக்கவேண்டும். நிர்விகாரமாயும் நிராகாரமாயும் நிரஞ்சனமாயும் ரோகமற்றதாயும் ஆதியந்தமற்றதாயும் பூரணமாயு மிருக்கிற பிரஹ்மமே நான் என்று பாவிக்கவேண்டும். நிஷ்களங்கமாயும் நிராதங்கமாயும் திரிவிதபரிச்சேத சூனியமாயும் ஆனந்தமாயும் அக்ஷரமாயும் முக்தமாயும் இருக்கிற பிரஹ்ம ரூபமே நான். நிர்விசேஷமாயும் நிராபாசமாயும் நித்திய முக்தமாயும் விகாரமற்றதாயும் பிரக்ஞான ஏகரசமாயும் சத்தியமாயும் மிருக்கிற பிரஹ்மந்தா னென்று பாவனை செய்ய வேண்டும். சுத்தமாயும் புத்தமாயும் தத்வமாயும் சித்தமாயும் பிரத்யக் ரூபமாயும் அகண்டமாயும்ஸ்வப்ரகாசமாயும் பராகாசமாயும் இருக்கிற பிரஹ்மந்தான் நானென்று பாவிக்க வேண்டும். சூட்சுமமாயும் சத்தாமாத்திரமாயும் நிர்விகற்பமாயும் அதிமகத்தாயும்கேவலமாயும் பரமாத்வைதமாயும் இருக்கிற பிரஹ்மமே நானென்றுபாவிக்கவேண்டும். இவ்வாறு நிர்விகாராதி சப்தங்களாற் சொல்லப்பட்ட கேவலம் வஸ்து மாத்திரத்தைத் தியானம்பண்ணுகிறமுமூட்சுவிற்குச் சித்தம் இலயத்தில் நிலைகொள்ளும். பிரஹ்மானந்த ரசாவேசத்தால் பிரஹ்மத்தோ டொன்றாகிப் புத்திநிச்சலாவஸ்தையை யடைந்திருப்பதுவே நிர்விகற்பசமாதியென்று சொல்லப்படும். அப்ரமத்தனா யிந்திரிய ஜயபத்தையுடையவனாய்ச் சுத்தனாய்ச் சமாதிசட்கத்தையெப்பொழுதும்

முமுட்சு செய்யவேண்டும்; உள்ளிலும் வெளியிலும் யாண்டும் அந்தப் பிரஹ்ம த்யான முடைய வனுகியே யிருந்து மனதிற்கு ஸ்வ ஸ்வரூபானுபவ ப்ரகாசம் எது வரையிற் சித்திக்கவில்லையோ அதுவரையிலும் தடையின்றிச் சமாதி சட்கத்திலே சர்வ காலத்தையும் கழிக்கவேண்டும்; மோக்ஷத்தை யிச்சித்திருக்கிற வித்துவானுலே இதுவிஷயத்திற் பிரமாதம் செய்யக்கூடாது; பிரமாதம் செய்யில் மாயை வியாபித்துக் கொள்ளும்; சூரியன்சென்று விடின் இருள் எப்படி வியாபிக்குமோ அவ்வாறே யென் றுணர்வாயாக.

அறிந்தவர்கள் ஸ்வானுபவத்தை விட்டு க்ஷண காலங் கூடப் பிரமாதமா யிருக்கமாட்டார்கள். ஸ்வானுபவத்திற் செய்யப்பட்ட பிரமாதந்தான் மிருத்யுவேயன்றி வேறு யமனில்லை. இந்தச் சமாதியில் யாதொருவன் முயற்சியோடும் பிரயாசப் படுகிருனே அவனுக்கு மறுபடி விகற்ப முண்டாக மாட்டாது. இதனுலேயே சர்வாத்ம பாவம் உண்டாம். சர்வாத்மபாவந் தான் கைவல்யம். வித்வானுக்கு ப்ரஹ்மஞானம் வந்ததற்குச் சர்வாத்மபாவமே பலமென்று சொல்லுகிருர்கள். அந்தச் சீவன் முக்தனுக்கு இந்த ஸ்வானந்தானுபவமான சர்வாத்ம பாவத்தைக் காட்டிலும் வேறே பயனில்லை. யாதொரு கிரந்தியானது யான் எனது முதலான அசத்தா யிருக்கிற தேகாதிகளிடத்தில் வியாபித்துக் கொண்டும் வாசனு சமூகங்களுடன் கூடினதாயும் இருக்கிறதோ அந்தக்கிரந்தியானது சமாதியாலே நசிக்கவேண்டும். சுத்தாத்மாக்களான முமுட்சுக்களுக்கு யாதொரு காரணத்தினுலே யாவற்றையும் சத்துரூபமாய்ப் பார்க்கும் பார்வை யுண்டாகின்றதோ அந்த

ப்ரஹ்மாத்ம ஸ்வரூபமான மோக்ஷத்திற்கு இப்பொழுது சொல்லிய மார்க்கமே தடையற்ற மார்க்கம்.

ஆகையால் நீயும் அதி ஜாக்ரதையாய்ச் சமாதிகளைச் செய்து இந்த க்ரந்தியை நன்றாய்த் தகித்து எப்பொழுதும் பிரஹ்மானந்த சமுத்திரத்தில் மூழ்கி விளையாடிச் சந்தோஷித்துக்கொண்டு ரமித்திருப்பாயாக. இந்தக் கர்மநாசமானது எப்பொழு தாயிற்றோ அப்பொழுது தான் அப்ரதிபந்தப் பிரஹ்மஞான முண்டாயிற்றென்று சொல்லலாம். விருத்தி யசைவற்றிருக்கிற இந்த நிர்விகற்ப சமாதியையே யோகிகள்யோகமென்று சொல்லுகிறார்கள்.

(953, 954, 955, 956, ஸ்லோகங்க ளிவ்விடத்தில்லை).

இயம மென்றும் நியம மென்றும் ஆசனமென்றும் பிராணாயாம மென்றும் பிரத்யாகார மென்றும் தாரணை யென்றும் தியானமென்றுஞ் சமாதியென்றும் இவ்வாறு யோகத்திற்கு எட்டங்கங்கள் உளவெனப் புத்திமான்கள் சொல்லுகிறார்கள். சமஸ்தமும் பிரஹ்ம ஸ்வரூபமென்னு முணர்ச்சியால் இந்திரிய சமூகத்தை விஷயத்திற் செல்ல வொட்டாமற் றடுப்பதே இயமமென்று சொல்லப்படும். இந்த இயமமானது அடிக்கடி அப்பாசிக்கத் தக்கது. விஜாதீய விருத்தியைத் தள்ளிச் சஜாதீய ப்ரஹ்மாகார விருத்தி ப்ரவாகத்தால் நியமமாய் ஆனந்தத்தை யனுபவிப்பதே சர்வதா சாதுக்கட்குச் சுபாவமா யிருக்கிற நியமமென்று சொல்லப்படும். எவ்வாசனத்தி லிருந்துகொண்டு எப்பொழுதும் பிரஹ்மத்தைச் சுகமாகவே சிந்திக்கக் கூடுமோ அவ்வாசனமே சுகத்தைக் கொடுப்பது; மற்றையவன்று.

சித்தமுதலாய சமஸ்தபாவங்களிலும் பிரஹ்மரூபத்தை யே பாவிப்பதாலே சமஸ்த விருத்திகளையுந் தகைவதே பிராணுயாம மெனப்படும். அதிற் பிரபஞ்சத்தைத் தள்ளுகிறதே ரேசகவாயுவின் காரியம்; பிரஹ்மமே நானுகிறேன் என்னும்விருத்தி பூரகவாயுவின் காரியம்; அந்த விருத்தியை நிச்சயப் படுத்துவது கும்பகத்தின் காரியம் ; இதுவே பிராணுயாமம். இதுவன்றிப் பிரா ணனைத் துன்புறுத்தும் பிராணுயாமம் சாதகனுக்கே யன்றி பிரபுத்தனுகிய ஞாதாவுக்கன்று. மனதை விஷ யங்களிலே நின்றும் திருப்பிச் சித் ரூபரசத்தில் மூழ்கச் செய்வது பிரத்தியாகார மெனப்படும். முமுட்சுவானவ னிதை யவசியம் செய்யவேண்டியது. எவ்வெவ்விடத் தில் மனது செல்லுகிறதோ அவ்வவ்விடத்தில் ப்ரஹ் மத்தைப் பாவித்து மனதைத் தாரணஞ் செய்வதே தாரணை யென்று சொல்லப்படும். நான் ப்ரஹ்ம ஸ்வ ரூபமாகவே இருக்கிறேனென்று நல்ல விருத்தியால் சித் தம் வேறென்றையும் அவலம்பிக்காமலிருப்பதுவேபர மானந்தத்தை யுண்டுபண்ணும் தியான மெனப்படும். நிர் விகாரமாயும் ப்ரஹ்மாகாரமாயும் இருக்கிற அகண் டாகார விருத்தியையும் மறப்பதே ஞானஸ்வரூபமான சமாதியாம். சமாதி செய்யும்போது விக்கினங்கள் பலாத்காரமாய் வரும்; அவையாவன:— அனுசந்தான மின்மை, ஆலசியம், போகத்திலிச்சை, பயம், அஞ்ஞானம், விக்ஷேபம், தேஜஸின் தோற்றம், ஒன்றுந் தோன்றுமை என்பன. இவ்விக்கினங்களை ஞானிகள் அவசியம் தள்ள வேண்டும். இந்த விக்கினங்களைத் தள்ளிப் பிரமாதமில் லாதவனும் இந்திரியங்களை வசப்படுத்தினவனு மான வன் சமாதி நிஷ்டையால் சாக்ஷாத் பிரஹ்மமாகச் சமர் த்தனுவன். இவ்வாறு குரு சொல்லிய வாக்கியத்தாலும்

வேதப்ரமாணத்தாலும் யுக்தியாலும் சாந்தமான இந்திரியங்களுள்ள ஸ்திர சித்தனான சீடனானவன் ஒரு சுத்த தேசத்தில் அசஞ்சலனாய் ஆத்மாவினிடத்தில் மனோலயம் உடையவனானான். இவ்வாறு வெகுகாலம் ஸ்வரூபத்தில் மனதை அசைவற நிறுத்தியிருந்து பின்னர் எழுந்து குரு சன்னிதானம் வந்து சந்தோஷத்துடன் வந்தனம்செய்து தழுதழுத்த நெஞ்சுடன் சிஷ்யன் சொல்வானாயினன். தயாநிதியாகிய தேசிகமூர்த்தியே! தேவரீரது யாதொரு கடாட்சத்தால் அத்வய ப்ரஹ்மஸ்வரூபமே யான் ஆனேனோ அவ்வாறயதேவரீரது கடாட்சத்தின் மகிமையை நான் எவ்வாறு அளவிடுவேன். நித்யானந்தஸ்வரூபராயும் அசங்கராயும் சாந்தராயும் அகங்காரம் விட்டவராயும் தயைக்கு வாசஸ்தான மானவராயும் பூமாஸ்வரூபராயும் இருக்கிற சற்குருமூர்த்தியாகிய தேவரீர்பொருட்டு அனந்தங்கோடி நமஸ்காரம். பிரளயத்திற் சலத்தாலெல்லாம் மூடியிருப்பதுபோன்று என்னாலே சமஸ்த ஜகத்தும் வியாபிக்கப்பட்டிருக்கிறதால் என்ன செய்யவேண்டியது? எங்கே செல்வேன்? யாதைக் கிரகிப்பேன்? யாதை நீக்குவேன்? சிதானந்த மகாசமுத்திரனான வென்னிடத்தில் பிரமாண்டகோடிகளானகுமிழிகள் மாயையாகிய காற்றினாலே உண்டாகி உண்டாகி மறுபடி யென்னிடத்திலேயே மறைகின்றன. ஏ தேவதேவ தேசிக மூர்த்தியே! தேவரீர் அனுக்ரகத்தால் நித்தியானந்தனாயும் கெடுதலை யடையாதவனாயும் கேவலம் பூரணனாயும் இருக்கிறேன். அகர்த்தாவாயும் அபோக்தாவாயும் அவிகாரனாயும் அக்கிரியனாயும் ஆனந்தகனனாயும் அசங்கனாயும் சதாசிவனாயு மிருக்கிறேன். தேவரீர் கடாட்சமாகிய சந்திர கிரணத்தால் சம்சார தாபத்தா லுண்டாயிருக்கின்ற

என்னுடைய துக்கங்களெல்லாம் நீங்கி அகண்டான ந்த அக்ஷய ஆத்மபதவியை க்ஷணத்தில் யானடைந் தேன். நிழல் நெருப்பிலேபடினும் நீரிலே படினும் நல் லதிலகப்படினும் கெட்டதிலகப்படினும் அந்நிழலுக்கு விலக்ஷணனான புருஷனைச் சீதோஷ்ணாதிகள் எவ்வாறு சம்பந்திக்கமாட்டாவோ அவ்வாறே சாக்ஷியங்களான தேகேந்திரியாதிகளின் விகாரங்களுக்கு விலக்ஷண னும் சாக்ஷியாயுமுள்ள ஆத்மாவாகியஎன்னைச் சம்பந் திக்க மாட்டா. எவ்வாறு கிரகத்திலுள்ள சுபாசுபங் கள் அந்தக் கிரகத்தை விளக்கி வைக்கின்ற தீபத்தைச் சம்பந்திக்கமாட்டாவோ, சூரியன், முன்பாகச் செய்யப் பட்ட கருமங்கள் சூரியனை எவ்வாறு சம்பந்திக்கமாட் டாவோ, இரும்பைத் தகிக்கப்பட்ட அக்கினியை இரு ம்பின் விகாரங்கள் எவ்வாறு சம்பந்திக்க மாட்டாவோ அவ்வறே கூடஸ்தனான என்னை யாதொன்றுஞ் சம்பந் திக்கமாட்டாது. இந்தப் பிரகாரம் சிஷ்யன் குருவைப் பார்த்துச் சொல்லி ஸ்தோத்திரம் செய்து வணக்கத் துடன் அநேக நமஸ்காரஞ்செய்து முமுட்சுக்கட்கு உபகாரமாய்க் கேட்கவேண்டிய அம்சத்தைக் கேட்கின் றான். மைந்தனே! நீ முதலில் யாதைத் தெரிந்துகொ ள்ளின் நீ யிப்பொழுது கேட்ட தெல்லாந் தெரியுமோ அந்தச் சப்த பூமிகளின் இலக்ஷணத்தைச் சொல்வேன் கேட்பாயாக. ஞான பூமிகள் ஏழு; அவற்றுள் க-வது சுபேச்சை, உ-வது விசாரணை, ௩-வது தனுமானசி, ச-வது சத்வாபத்தி, ரு-வது அசம்சத்தி, சு-வது பதார்த் தாபாவனை, எ-வது துரியகாமி என்று சொல்லப்படும். இவ்வாறு யான் ஏன் மூடனாயிருக்கிறேன்? வேதாந்த சா ஸ்திரங்களாலும் சாதுக்களாலும் யான் எப்பொழுது

அங்கீகரிக்கப் படுவேன்? என்று வைராக்யத்துடன் மோக்ஷேச்சை உண்டாவதே சுபேச்சையாம்.

சாதுக்கள் சாகவாசத்தால் வைராக்கியத்துடன் வேதாந்த சாஸ்திர விசாரஞ் செய்வதே விசாரணையாம். சுபேச்சை விசாரணை யென்னு மிவ்விரண்டாலும் விஷயங்களிலாசை மட்டுப்படுவதே தனுமானசி யெனப்படும். இந்த மூன்று பூமிகளி னப்யாசத்தால் மனமானது விஷய ஆசையை விட்டுச் சுத்தமாயுள்ள ஆத்மாவிடத்தி லிருப்பதே சத்வாபத்தி எனப்படும். நான்கு பூமிகளி னப்யாசத்தால் விஷயத்திற் சம்பந்தப்படாமல் சத்வகுண மேலிட்டிருப்பதே அசம்சத்தி யெனப்படும். ஐந்து பூமிகளி னப்யாசத்தால் ஆத்மாராமனு யிருப்பதால் உள்வெளியாயிருக்கிற பதார்த்தங்களுடைய பாவனையின்மையால் மற்றையரா லதிமுயற்சியோடும் விஷயத் தோற்றம் உண்டுபண்ணப்பட்டுப் பின்பு விஷய ஸ்மிருதி வருவதுதான் பதார்த்தாபாவனை யெனப்படும். ஆறு பூமிகளின் வெகுகாலாப்யாசத்தால் பேதமே தெரியாமல் சுபாவமாய் ஒரே ஆத்மாவி னிடத்தில் நிஷ்டையை யடைந்திருப்பதே துரியகாமி யென்று சொல்லப்படும். பிரஹ்மத்தை யறிந்த மகாத்மாக்கள் சமஸ்த திருசிய பதார்த்தங்களிலும் இது எனது என்னும் பாவனை யற்று இருப்பதே சாக்கிரத்தில் சாக்கிரம் யென்று சொல்லப்படும். சச்சிதானந்த ரூப ஆத்மாவி னிடத்தில் திருசிய பதார்த்த பரம்பரையை யறிந்தும் ரூபங்களை விட்டு விடுவதும் சாக்கிரத்திற் சொப்பனமென்று சொல்லப்படும். 'பரிபூரண சிதாகாசஞான': ஆத்மாவினிடத்தில் ஞானஸ்வரூபத்தையே தவிர வேறே யொன்று

மில்லையென்பது சாக்கிர சுழுத்தி யெனப்படும். மூலாக் ஞானம் நசித்திருத்தலால் இந்திரியங்களின் தோற் றத்தாலும் அவைகளின் வியாபாரத்தாலும் எனக்குக் கொஞ்சங் கூடப் பந்த முண்டாக மாட்டா தென் பதுவே சொப்பனத்தில் சாக்கிரமாகும். காரண அஞ் ஞானத்திற்கு நாசம்வந்தால் திருஷ்டா தெரிசனம் திருசியம் என்னும் திரிபுடிகாரியம் ஒன்றுமில்லையென் னும் ஞானந்தான் சொப்பனத்திற் சொப்பனமென்று சொல்லப்படும். அதி சூட்சும விசாரத்தால் தன்புத்தி அசஞ்சல விருத்தியாயிருந்து ஞானத்தில் லயத்தை யடைவதே சொப்பன சுழுத்தியென்று சொல்லப்படும். பின்பு எந்த ஆனந்த அனுபவமானது புத்தி விருத்தி யைப் பரவுதலால் சின்மயா காரத்தை யடைகின்றதோ, அதுவே சுழுத்திச் சாக்கிரமென்று சொல்லப்படும். எந்தச் சித்த விருத்தியானது வெகுகால மனுபவிக்கப் பட்ட அந்தரானந் தானுபவத்திற் சமத்துவத்தை அடைகின்றதோ அதுவே சுழுத்திச் சொப்பன மெனப் படும். ஜீவன் முக்தனுடைய அகண்டாகார விருத்தி யானது கேவலபாவத்தையடைந்து மிகவும் அறிவுமாத் திரமா யிருக்கின்ற அதுவே சுழுத்தியிற் சுழுத்தி யென்று சொல்லப்படும். சமஸ்தாவஸ்தை களுக்குஞ் சிரேஷ்டமான இந்தத் துரியாவஸ்தையானது பிரஹ் மம்போல் நிர்விகாரியாயும் ஏகரூபமாயும் விளங்கும். இவ்வாறு அவஸ்தைகளின் உற்பனத்தை விபரமாய்ப் பார்க்கின்றவன் சுகமாய் முத்தியை யடைவன். முந்திய மூன்று பூமிகளும் ஜகத்ரூபத்தோடே கூடிக்கொண் டிருப்பதால் சத்தியமாயிருக்கிற ஜாக்கிரத் தென்று சொல்லப்படும். அத்வைத ஸ்வரூபஸ்திர பாவத்தை யடைந்து துவிதவஸ்து நாசத்தையடைந்த பொழுது

நான்காவது பூமியிற் சேர்ந்ததால் உலகைச் சொப்ப னம் போற் பார்க்கிறார்கள். சுழுத்திபத மென்னும் பெயரிய ஐந்தாவது பூமியில் ஏறினவன் சமஸ்த விசே ஷாம்சங்களையும் ஒழித்து அத்வைத ஸ்வரூபமாத்தி ரத்திலிருக்கவேண்டும். பூமியையாசரித்திருக்கிற யோகி அந்தர் முகனாயும் சாந்தனாயும் இருப்பதால் காடநித் திரை செய்பவன்போல் காணப்படுவன். இந்த ஆறா வது பூமியில் நன்றா யப்யாசம்செய்து வாசனையொழி ந்து கிரமமாய்த் துரியாவஸ்தை யென்னும் பெயரிய ஏழாவது பூமியை யோகீஸ்வர னடைகின்றான். விதேக முத்தியே துரியாதீத மெனப்படும். அந்த ஏழாவது பூமியில் சத்து அசத்து அகங்காரம் அனகங்காரம் ஒன்றுமின்றி மனோவியாபாரமும் அத்வைத ஸ்வ ரூபத்தில் அத்தியந்தம் லயித்து நிர்ப்பயமாயிருக்கி றான். சூனியமாயகடத்தில் உள்ளும் வெளியும் ஆகா சம் எப்படிப் பூரணமாயிருக்கிறதோ, சமுத்திரத்தில் முழுகின கடத்திற்குள் உள்ளும் வெளியும் நீர் எப் படி நிறைந்திருக்கிறதோ அப்படி விருத்தி சூனியனா யும் ஆனந்த பூரணனாயு மிருப்பன். யாதொருவனுக்குச் சமஸ்த விவகாரங்களும் முன்போலவே இருப்பினும் ஆகாசம் போல் அபிமான மில்லாம லிருப்பவனே ஜீவன் முத்தன். எவன் மனதானது சுகதுக்கங்களிற் சந்தோஷ விஷாதத்தை யடையாது எப்பொழுதும் போல் நிர்விகாரமாயிருக்கிறதோ அவனே ஜீவன்முத் தன். யாதொருவன் விழித்துக் கொண்டே சுழுத்தி யை யடைந்தவன்போ லிருக்கிறானோ யாதொருவனுக் குச் சாக்கிரமில்லையோ யாதொருவனுக்கு வாசனையின் னுண்டான விஷயக்ஞான மில்லையோ அவனே ஜீவன் முத்தன். காமக்ரோதம் பயம் முதலான வற்றிற்கு

அனுரூபமாய் நடப்பது போலிருந்தாலும் உள்ளே ஆகாயம்போல எவன் நிருமலமாயிருக்கிறனே அவன் றன் ஜீ வ ன் முத்தன். காரியங்களைச் செய்யினும் செய்யாதிருப்பினும் எவனுக்கு அகங்கார மில்லையோ, எவன் புத்தி பற்ற வில்லையோ அவன்றன் ஜீவன் முத்தன். எவன் சமஸ்த பதார்த்தங்களிலும் விவகார முள்ளவனு யிருந்தபோதிலும் பதார்த்தத்தி லெப்படிச் சந்தாபமில்லாமலிருப்பானே அப்படி அந்த விவகாரத் திற் சீதளபாவனுய் பூரணாத்மாவாய் இருக்கிறனே அவன் சீவன் முத்தன். துவிதமில்லாமற் சின்மாத்திர மாயும் அத்தியந்த பவித்ரமாயிருக்கிற ஸ்தானத்தில் விசிராந்தியை யடைந்து சித்தம் அலைவற்றிருக்கிற வன்றன் ஜீவன் முத்தன். இது ஜகத்து இவனின்று னென்பன முதலான அவாஸ்தவமான திருசியவஸ்து எவன் சித்தத்தில் தோன்றவில்லையோ அவன் ஜீவன் முத்தன். நான் சிதாத்மா, பரமாத்மா, நிர்க்குணன், பராத்பரன் என்று ஆத்மா மாத்திரனுக யெவனிருக் கிறனே அவன் ஜீவன் முத்தன். தேகத்ரயங்கட்கு மப்பாற்பட்டுச் சுத்த சைதன்யமான பிரஹ்மமே நா னென்று எவன்மனது நிச்சயமாயிருக்கிறதோ அவன் ஜீவன் முத்தன். எவன் தேகாதியிற் பிரக்ஞையில் லாமல் பிரஹ்மமே நானென்கிற நிச்சயத்துடன் பர மானந்த பூரணனு யிருக்கிறனே அவன் ஜீவன்முத் தன். நானே பிரஹ்மஸ்வரூபன் சித்ரூபன் நானென்று நிச்சயம் எவனுக்கு இடைவிடாம லிருக்கிறதோ அவ னே ஜீவன்முத்தன்.

அலைந்துகொண்டிருக்குங் காற்றானது அலையாம லிருப்பதுபோலப் பிராரத்த சரீரங் காலகருமத்தை யடைந்த தன்பின் ஜீவன் முத்தித் தசைபோய் விதேக

முத்திப் பதத்தையடைவன். எந்த வஸ்துவானது மூடர்களுக்கு விஷய மாகாததாயும், சூனியவாதிகளுக்குச் சூனியமாயும், பிரஹ்ம ஞானிக்குப் பிஹ்மமாயும், விஞ்ஞானவாதிக்கு விஞ்ஞானமாயும், அஞ்ஞானிகட்கு அஞ்ஞான மாயும், சாங்கியர்களுக்குப் புருஷனாயும், யோகிகளுக்கு ஈஸ்வரனாயும், சைவருக்குச் சிவனாயும், காலவாதிகட்குக் காலமாயும் இருக்கிறதோ அந்த வஸ்துவே ஆனவன் விதேகமுத்தன். எந்தவஸ்து சகல சாஸ்திர சித்தாந்தமோ, எந்தவஸ்து சகல ப்ராணிகளின் இருதயத்தை யடைந்திருக்கிறதோ, எந்தவஸ்து சர்வரூபமாயும் சமஸ்தத்திலும் இருக்கிறதோ அந்த வஸ்துவாகவே அவனிருக்கிறான்.

நான்பிரஹ்மம் நான் சித்ரூபன் என்னும் சிந்தனைகூட யிராமல் அறிவுமாத்திரமா யிருப்பவனே விதேகமுக்தன். எவனுக்குப் பிரபஞ்சத்தோற்றமும் பிரஹ்மத் தோற்றமும் இல்லையோ சகலபாவத்திற்கு மப்பாற்பட்ட பாவத்துடன்கூடினவன் விதேகமுக்தன். சித்த விருத்திக் கதீதனாயும் சித்தவிருத்திகளை விளக்கி வைக்கப்பட்டவனாயும் சித்தவிருத்தி வினையும் இருப்பவனே விதேகமுக்தன். நான் ஜீவாத்மா பரமாத்மாவென்று ஒருசிந்தையு மில்லாமல் ஒருசங்கற்பமும் அற்றவனே விதேகமுத்தன். ஓங்காரத்தினது வாச்சிய மற்றவனாயும் ஒன்றற்கும் வாச்சிய மற்றவனாயும் அவஸ்தாத்ரய மற்றவனாயும் இருப்பவனே விதேக முக்தன். விடுத்த கஞ்சுகத்தைப் பாம்பானது எவ்வாறபிமானிக்காதோ அவ்வாறு ஸ்தூல சூக்ஷ்ம சரீரங்களை அந்தவிதேகமுக்த னபிமானிக்க மாட்டான். காரணத்துடன் கூடப் பொய்யாயிருக்கிற அஞ்ஞானமானது பிரஹ்மஞானாக்கினியாற் றகிக்கப்பட்டபோது நேதிநேதியென்று லயஞ்செய்து சரீர மில்லாமல் நின்றபடியால் அசரீரனா யிருக்கின்றவனே விதேகமுக்தன். விஸ்வன், தைஜஸன், பிராஞ்ஞன், விராட்டு,

இரணியகருப்பன், ஈஸ்வரன், பிரஹ்மாண்டம், பிண்டாண்டம், பூமியாதி இவையாவும் தங்கள் தங்கள் உபாதியில் இலயத்தையடைந்து அந்தத்திற் பிரத்யகாத்மாவாய் நின்று அப்பால் சத்தா தூஷ்ணீம் பாவமென்னும் ஸ்வரூபமாத்திரமா யிருப்பதுவே விதேகமுக்தி. தேசகால வஸ்துபேதங்க ளெவனுக்குச் சிறிதுமில்லையோ அவனே விதேகமுக்தன். ஜீவன் ஈஸ்வரன் வேதம் சாஸ்த்ரம் இதுசித்து நான்சித்து என்னும் நிச்சயம் ஒன்றுமின்றி யிருப்பவனே விதேகமுக்தன். வாஸ்தவமாயும் அவாஸ்தவமாயும் பர ப்ரஹ்மந்தானிருக்கிறது. அது ஞானத்தினலேயே அறியப்படுமேயன்றி எந்தவிதத்தானுங் கற்பகோடி காலத்திலேனும் அறியப்பட வொண்ணது. சாந்தமான பிரஹ்ம வஸ்துவை விட வேறே மாயையென்பதுமில்லை அவித்தை யென்பது மில்லை யென்று எல்லாவற்றையும் பொய்யாக்குவதே அத்யாத்ம சாஸ்த்திரத்தினது சித்தாந்தம். தன்பால் அன்புசெய்பவர்களிடத்துச் சுகிர்தத்தையும் தனக்குத் துயர்புரிபவர்க ளிடத்து தனது பாவத்தையும் விட்டுவிட்டு எப்பொழுதுந் தியானஞ்செய்து பிரஹ்மத்தை யடைபவன் ஞானி. நல்லபுத்திமானன மைந்தனே! இந்தமுமுட்சுவிற்கு விஷயங்கள் எவ்வளவு எவ்வளவு விடுபடுகின்றனவோ அவ்வளவு அவ்வளவு ஆத்மா ஆனந்தரூபராக ஆகின்றார். ஞானியானவன் பரமாயும் நாச ரகிதமாயும் இருக்கிற ஸ்வஸ்வரூபத்தை யறிந்ததால் எந்தவிடத்தில் மரணத்தை யடைந்தாலும் பரப்ரஹ்மத்தில் இலயத்தை யடைவானே யன்றி அவன்பிராணன் மறுபடி ஒருசரீரத்தைப் பற்றமாட்டாது. எந்தவஸ்து பிரியமாய்த் தனக்கிருக்கின்றதோ அதைத் துச்சமாய் நினைத்து விட்டால் மோக்ஷத்தை யடைவன். அசங்கற்பமாகிற சஸ்திரத்தா லிந்தச் சித்தத்தை எப்பொழுது சேதித்துச் சொஸ்தப் படுத்துகிருனே அப்பொழுதுதான் சாந்தமாயும் யெங்கும் நிறைந்திருக்கிற பிரஹ்ம ஸ்வரூபத்தை யடைவன்.

ஸ்ரீகுருமூர்த்தி திருவாய்மலர்ந்தருளிய இவைகளை யெல்லாம் இருசெவிக் கமுதுவார்த்ததுபோற் கேட்டுச் சிஷ்யன் சகலசம்சயமும் நீங்கி அந்த தேசிகேந்திரரிடத்து அனுஞ்ஞை பெற்றுக்கொண்டு பந்தத்தினின்றும் விடுபட்டவனாய்ச் சொஸ்தமாய்க் காலங்கழித்தனன். ஸ்ரீதேசிகமூர்த்தியும் சன்மாத்திரமான ஆனந்த சமுத்திரத்தில் மூழ்கினவராய் மௌனியாய் பூமண்டலத்தைப் பவித்திரம் பண்ணிக்கொண்டு சஞ்சரித்துக் கொண் டிருந்தார்.

முமுட்சுக்களுக்குச் சுகமாய் ஞானம் வருவதற்காக இவ்வாறு குருசிஷ்ய சம்வாதத்தால் ஆத்மலக்ஷணம் நிரூபிக்கப் பட்டது. சர்வவேதாந்த சித்தாந்த சார சங்கிரகமென்னும் பெயர்வாய்ந்த இந்தக் கிரந்தமானது சாதுக்களுடைய இருதயக் கிரந்தியாகிற அஞ்ஞானம் நீங்குவதற்காகச் செய்யப்பட்டது. பகவத் பாதாசாரியர்கள் என்று பெயர் வழங்கும் ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகள் திருவாய் மலர்ந்தருளிய இந்தக்கிரந்தத்தை முமுட்சுக்கள் நிரந்தரம் ஆதரத்துடன் தேசிக முகமாய்ச் சிரவணஞ் செய்து மனன நிதித்யாசன சமாதி பரர்களாய் வாழ்வார்களாக.

குருவணக்கம்.

முத்தியை யீயு முத்திரா மேச முனிவர்க டொழு முனி வரனை, நித்தியவருணை சலமுனி வரனை நிகாறுங் கருணைமா நிதியை, சத்திய ஞான சுகவடி வான சற்குரு வீரமா தவனை, நித்தமும் பாடி நைந்து நைந் துருகி நிரந்தரம் பணிந்திட ரொழிப்பாம்.

ஸ்ரீவேதாந்த சித்தாந்தசார சங்கிரகம்

முற்றிற்று.

குருவே துணை.